ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# வைணவ வழித்தோன்றல் வரலாறு

பரிசோதகர் :

ஸ்ரீமான் உ. வே. திருமலை அனந்தாண்பிள்ளை
க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி
வித்வான், சிரோமணி, திருப்பதி

ஆசிரியர் :

டாக்டர் மா. வரதராஜன் எம். ஏ., பி எச். டி.
தமிழ்த்துறை விரிவுரையாளர்,
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
திருப்பதி

விசதவாக்சிகாமணியான மணவாளமாமுனிகளின்
550 வது திருவத்யயந நாள் ஆங்கிரஸ வருடம்
மாசி துவாதசி 18-2-1993
நினைவு மலர்

ஸ்ரீ அனந்த் பதிப்பகம்
திருப்பதி
1993

முதற்பதிப்பு : ஏப்ரல் 1993
பிரதிகள் : 700

கிடைக்குமிடம் :
1. டாக்டர் மா. வரதராஜன்
ஸ்ரீ அனந்த் பதிப்பகம்
14 / 86 பத்மாவதிபுரம்
திருச்சானூர் ரோடு
திருப்பதி-517503

2. ஸ்ரீ டி. எம். ரங்கநாதன்
102, கிழக்குக் குளக்கரைத் தெரு
திருவல்லிக்கேணி,
சென்னை-600 005

---

அச்சிட்டோர் :
ஸ்ரீ கோமதி அச்சகம்
41, சூரப்ப முதலி தெரு,
சென்னை-5

பேராசிரியர் Dr. இரா. அரங்கராஜன்
M. A., Ph. D. (மதுரை)

# முன்னுரை

மன்னுபுகழ்சேர் மணவாளமுனிவரர் முன்னோர் மொழிந்த முறை தப்பாமற்கேட்டுப் பின்னோர்ந்து அவை தம்மையே மன்னிய சீர் வெண்பாவில் வைத்துப் பின்னவரும் கற்க உபதேசமாகப் பேசியருளினார்.

அருளிச்செயலை ஆராய்ந்து அதன் அருமை பெருமைகளை முந்துற முன்னம் திறம்பட வெளிப்படுத்தியவர் மாமுனிகள் அருளிச்செயல்களுக்கு ஆசாரியர்கள் இயற்றியருளிய பேருரைகளின் வரலாற்றைத் தமிழ் உலகிற்கு அறிவுறுத்தியருளிய பெருமையும் அவருக்கே சேரும். இவையனைத்தையும் அவர் ஒருசேரக் காட்டுவதற்கு மேற்கொண்ட கட்டமைப்பு உபதேசரத்தினமாலையின் தனிச் சிறப்பாகும்.

ஒரு நூலுக்குத் தேர்ந்த நுவல் பொருள் (தாத்பர்யம்) ஒன்றாகவே அமையும். அகன்று விரிந்த ஆயிரம் இன் தமிழ்ப் பாடல்களான திருவாய்மொழியின் தாத்பர்யம் பரம புருஷார்த்த நிச்சயமாகும். பரார்த்த கைங்கர்யமான வழுவிலா அடிமைத் திறமே திருவாய்மொழியின் தாத்பர்யார்த்தம் என்று ஆசார்யர்கள் அறுதியிட்டார்கள். அதனைப் பல்வகையாலும் நிரூபிக்கும் பாங்கில் ஆழ்வார்

ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபங்களையும் உபாய விரோதி ஸ்வரூபங்களையும் மற்றும் அவற்றின்பாற்பட்ட செய்தி களையும் விரிவாக அருளிச்செய்தார். பிள்ளை உலகாசிரியர் ஸ்ரீவசநபூஷணம் என்ற மஹாக்ரந்தத்தை அருளிச் செய்தார். அதற்குத் தாத்பர்யார்த்தம் சரமோபாய நிர்ணயமாகும். ''ஆசார்யாபிமானமே உத்தாரகம்'' என்பதுவே அவர் காட்டியருளிய நன்னெறியாகும். அதை நிரூபிக்கும முகத்தால் ஆறு என்பதாய் ஒன்பது என்பதாய் விஷய விபாகங்கள் செய்து அறியவேண்டும் அர்த்தங்களை விரித்தருளினார்.

மணவாள மாமுனிகள் தாமும் முன்னோர் நெறியிற் சென்று உபதேசரத்தினமாலையைப் புனைந்தருளினார். உபதேசரத்தினமாலையின் நோக்கும் உலகாசிரியன் நிறுவிய கருத்தேயாகும்.

ஞானமனுட்டானமிவை நன்றாகவே உடைய
னான குருவையடைந்தக்கால்—மாநிலத்தீர்
தேனார் கமலத் திருமாயகள் கொழுநன்
தானே வைகுந்தம் தரும்

என்பதுவே தலையான உபதேச ரத்தினமாகும். இப்பாடற் பொருளை விரித்துரைக்கும் முன்னுரையே முன்புள்ள பாசுரங்கள். ஞானமாவது அருளிச்செயலால் பிறப்பது; அனுட்டானமாவது தாழ்வாதுமில் குரவர்களின் நல்லொழுக்கத்தை அறிவதால் ஏற்படுவது, எனவே, அருளிச்செயலை இந்த உலகிருள் நீங்க உபகரித்த ஆழ்வார்களின் பெருமைகள் மற்றும் அருளிச்செயற் பொருளை ஏழ்பாருமுய்யஉபகரித்த ஆசார்யர்கள் பெருமை கள் இவ்வாறு பல விஷயங்களையும் வரலாறுகளையும் மதுரகவிகன் எதிராசர் நம்பிபிள்ளை பின்பழகராம் பெருமான் சீயர் ஆகியோரின் அனுஷ்டானங்களையும் எடுத்துக்காட்டி 'ஆசார்யாபிமானமே உத்தாரகம்' என்ற சூத்திரத்தில் வரும் ஆசார்ய சப்தத்துக்கு விளக்கமாகவே உபதேசரத்தினமாலையை அமைத்திருக்கும் அழகு

அதிசயமானது. ஆசார்யனாகிறான், அருளிச் செயல்களை ஒதி இன்பமிகும் ஆறாயிரம் தொடக்கமான வ்யாக்யானங் களைக் கற்று இன்னருளால் பேசி வரம்பறுத்த எதிராசரு டைய திருவடிகளில் சம்பந்தமுற்று அவர் தம்மாலேயே 'ஆரியர்காள்' என்று போற்றப்பட்டவர்களான ஆசார்ய புருஷர்களின் திருவம்சத்தில் வருபவனேயாகும். அத்தகைய ரான ஓர் ஆசார்ய ஸம்பந்தத்தால் திருமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும் என்பது மாமுனிகள் உணர்த்திய உண்மையாகும்.

உபதேசரத்தின மாலைக்கு அணிசேர்த்தவர் பிள்ளை லோகஞ்சீயர். அவருடைய பேருரை அரிய கலைப்பெட்டகம். அறிவுக் களஞ்சியம்; ஆய்வுப் பொக்கிஷம்; அவர்தம் பேருரையை நன்கு கற்று அதன் அருமை பெருமைகளைப் பிறரும் அறிந்து உபதேச ரத்தினங்களைக் கொள்ளும் முறையில் **பேராசிரியர் டாக்டர் மா வரதராஜன் ஸ்வாமி** தெள்ளிய நடையில் இந்நூலை உருவாக்கியிருக்கிறார். வைணவ வரலாற்றை ஆய்வு செய்வார்க்கு இந்நூல் பெரிதும் வழிகாட்டியாகத் திகழும். அவருக்குத் தமிழும் வைணவமும் மங்களாசாஸனம் செய்து போற்றும்.

Dr **இரா. அரங்கராஜன்**, M A., Ph D.
28/A அக்ரஹாரம் தெரு, பழங்காநத்தம்,
மதுரை — 625003

ஸ்ரீ:

பேராசிரியர் C. ஜெகந்நாதாசார்யர்
M.A. (History) M. A. (Tamil), L.T. P.O.L.,
Dipl. Geog, Vidwan
முன்னாள் தமிழ்ப்பேராசிரியர், விவேகாநந்தர் கல்லூரி,
மயிலை; சென்னை.
U.G.C. பேராசிரியர்.

# மதிப்புரை

வைணவத்தின் சீர்மை வழிவந்த வாற்றினை
நைவளப் பண்ணேபோ லாய்ந்து—கைவணத்தின்
திறமெலாம் காட்டிச் சுருங்க வுரையிட்ட
சிறப்பினை நெஞ்சேநீ உள்ளு.

பிள்ளைலோ கம்சீயர் யாத்த வியாக்கியையில்
உள்ளபடி தேர்ந்து உரைகொழித்து—மெள்ளத்
தரங்கநீர் சேதுகட்ட வுற்ற அணிலேபோல்
அரங்கேற வைத்தா ரிவர்.

கையிலங்கு நெல்லிக் கனிபோல மாமுனிவன்
பையரவில் மாயன்றன் சீரெல்லாம்—வையம்
அறிந்துய்ய ஆழ்வாரா சாரியர்கள் நூல்காட்டி
நிறைவித்த ஆடியிந் நூல்.

வரதரா சன்செய்த சேவையைப் பாராட்டிச்
சரதம் மகிழ்வரால் ஜீயரே—சுரதமாய்ப்
பிழிந்து எளியோரும் நன்கறிய வைத்த
வழியினைச் சிந்தைசெய் தே.

ஸ்ரீஶைலேஶ தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்

மணவாளமாமுனிகள் திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளிலே ஆச்ரயித்துப் பல ரஹஸ்யங்களிலுள்ள அர்த்தங்களையும் அதிகரித்தவர். பெரிய ஜீயர் எனக் கொண்டாடப் படுபவர். திருவரங்கத்தையே இருப்பிட மாக்கொண்டு திகழ்ந்து வந்ததனாலே ''கோயில் மணவாளமாமுனிகள்'' என்று பிரசித்தர்.

பரமகாருணிகரான இவர் தம்முடைய பரமகிருபை யாலே ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் அவதார வைபவங்களையெல்லாம் உலகமாந்தரனைவரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி உபதேச முகத்தான் தம் நெஞ்சை முன்னிலைப்படுத்தியும், உலகோரை முன்னிலைப் படுத்தியும் கூறுவதன் மூலம் உபதேச பரம்பரையாக வந்த அர்த்தங்களையெல்லாம் தமது **உபதேசரத்தினமாலை** யென்ற பிரபந்தமூலமாகப் பிரதிபாதித்தருளினார்.

இனி ஒரு சில நுண்ணிய விஷயங்களைக் கூறுவாம்.

**செய்யுள் 6:** இங்கு 'தேசுடனே தோன்று சிறப்பால் என்றவிடத்து 'பிறப்பால்' என்றும் பாடபேதமுண்டு. இப்பாடபேதத்தால் நாம் அறிய வேண்டுவது:' 'தோன்றும்' என்பதாலேயே பிறப்பு பெறப்படுமே! ஆகையாலே, மேலும் 'பிறப்பால்' என்பது விதப்புக்கிளவி

யாகும் என்பர். ஆனால், 'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும். 'தேசுடனே' என்றதாலே அயோநிஜராய்த் தோன்றியமை பெறப்பட்டாலும், 'பிறப்பால் ஒப்பிலவாம் நாட்கள்' என்று கொண்டால், அயோநிஜரோடு ஸ்ரீ ராமபரதலக்ஷ்மணர்போல் அடுத்த நாட்களில் **'ஜன்ம நக்ஷத்திரங்களில்'** அவதரித்தார்கள் என்ற நயம் தோன்றுவது காண்க.

**செய்யுள்** 24:- இச்செய்யுளில் 'சந்ததியாய், தன்மைய ளாய், பிஞ்சாய்' என்று ஆயீற்று வினையெச்சங்கள் மும் முறையடுக்கி வந்து **பழுத்தாளை** என்ற வினையாலணை யும் பெயரோடு முடிந்தமை நோக்கத்தக்கது. இந்த இலக்கண நுணுக்கம் காணமாட்டாமல் வெறுமனே சிலர் கூறும் செவிக்கினாதவுரை வெற்றுரையென விடுக்க. மற்றும், ஒரு விசேடம் காணத்தக்கது, ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சிநிற்குந் தன்மையை ''தூமணி மாடத்தில் காணலாம்: ''துவளில்மாமணிமாடம்' என்று குற்றம் எடுத்துக் கூறிக்கழிக்கவேண்டியதிலையே'' என்றார் பெரியவாச்சான் பிள்ளை தமது மூவாயிரப்படியில். 'ஆழ்வார்கள்' என்று பன்மையிருப்பினும், அவயவியாகிய நம்மாழ்வாரைச் சிறப்பாகக் குறிப்பது. இதனை, ''ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்'' என்ற விடத்தும் காணலாம்.

**செய்யுள்** 37-''இதனில் ஓராண்வழியாய்'' என்ற பாடமே பெரிதும் காணப்படுகிறது. எனினும்,

''ஓரான்வழியாய்'' என்ற பாடமும் உண்டு. அதுவும் சிறப்புடைத்தே. எப்படியெனில், ''ஔஃகான் ஒற்றே ஆடூஉவறிசொல்'' (தொல். கிளவி 5) இதனால் ஆடூஉவறி

சொல்லாவது னஃகானொற்று என்றகருத்துப் பெறப்படும். இந்தப் பாடம் கொண்டால், மேலே அச்செய்யுளில் வருகின்ற 'முன்னோர், இன்னருளால்' என்பவற்றோடு னகர மெய்யொலிநயம் பொருந்தியிருப்பதைக் காணலாம். மற்றும், ''ஊரானோர் தேவகுலம்,'' ''பகுதியான் பாற்பட்டொழுகப் பெறின்'' (குறள் : 111) என்றவிடத்து ஆனுருபு **''தோறும்''** என்னும் பொருட்டாய் நின்றது. அதுபோல, ஓரான்வழியாய் என்பது—ஒருவர் பின் ஒருவர் **தோறும்** ஆசாரிய ஸ்தானம் நின்று குருபரம்பரை வந்தது என்பது ஏற்படும். பின்னர் எதிராஜர் இன்னருளால் எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளை ஏற்படுத்தி ''ஓரான்வழிமுறையை மாற்றி— **''ஆசையுடையோர்க்கெல்லாம்** ஆசாரியர்களே! நீங்கள் அருளிச்செயல்களின் ஏற்றங்களைக் கூறுமின்கள் என்று அருளிச்செய்து வரம்பு **தீர்மானித்து முடிவுறச் செய்தார்.** இது மிகவும் நுண்ணிதாகக் கவனிக்க வேண்டுவது. வரம்பு அறுத்தார் என்று கொண்டு கட்டை நீக்கினார் என்று பொருள் காணுதல் பொருத்தமுறாது. எங்ஙனென்னில், கூறுவல். ''ஆசையுடையோர்க்கெல்லாம்'' என்பதன் மூலம் வரம்பு தீர்மானித்து முடிவுகட்டியுள்ளாரேயொழிய வரம்பை நீக்கவில்லை. ஆசையென்பது - ஆஸ்தை. ஆஸ்தையாவது - சிரத்தை, பேற்றில் நம்பிக்கை. ஆகவே அங்கணத்தில் உக்க அமிழ்தமாகப் போகாமல் தம் கணத்தார் முன் கோட்டி கொளல் என்ற சித்தாந்தத்தின்படி வரையறை செய்தார். எனவே, 'வரம்பறுத்த' என்பதில் அறுத்தல்—தீர்மானித்தல், முடிவு செய்தல் என்று பொருள்படும். ''முத்தழற்குடையோன் முக்கட் கடவுளென் றறுத்திடும் வழக்கு'' என்றது. கல்லாடம் (59, 13),

இனி செய்யுள் 35-இல் ''ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும் தாழ்வாக நினைப்பவர்களைச் சென்று அணுகக் கூசித்திரி'' என்றும்; செ : 60-இல் ''தன் குருவின் தாளிணைகள்தம்மில் அன்பு ஒன்றில்லாதார் நரகம் அடைவர் என்றும்; செ : 71-இல் ''தம் நெஞ்சில் தோன்றியதைச் சொல்லிக் கொண்டு இதுதான் சுத்தவுபதேசம் என்ற மூர்க்கருடன் சேராதே'' என்றும்; செ . 68—இல். சமூகத்தில், நாத்திகர், ஆத்திகர், ஆத்தி—நாத்திகர் என்ற மூவகையினருள் முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டு, நடுவிலுள்ள ஆத்திகரை நாளும் தொடர்வாய் என்றும், தமது நெஞ்சுக்கு அறிவுறுத்துவது போல் நமக்கு நல்லுபதேசம் செய்கிறார்.

இங்ஙனம், ஆழ்வார் ஆசார்யர்களின் பெருமைகளையும், அவர்களின் ஜன்மநக்ஷத்திரங்களின் பெருமையையும், நம்மாழ்வார் எதிராஜர் அவதாரத்தின் தனிச் சிறப்பினையும் எடுத்துக் காட்டுகிறார். மற்றும், திருவாய்மொழியின் சிறப்பையும், அதற்கேற்பட்ட ஐந்து வியாக்கியானபடிகளையும் தெளிய ஓதினார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, பரமகாருணிகரான பிள்ளைலோகாசார்யர் திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீவசனபூஷணத்தின் பெருமையை அனைவர் நெஞ்சிலும் உறுத்த ஏழுவெண்பாக்களாகிய ஒண்பாக்கள் மூலம் (செ : 53—59) வலியுறுத்துகிறார். [ஈண்டு இந்நூலுக்கு மாமுனிகளின் சிறந்த வியாக்கியானத்தை நினைக.]

கடைசியாக.

''இந்த உபதேசரத்தினமாலை தன்னைச்
சிந்தைதனில் நாளும்சிந்திப்பார்—எந்தை
எதிராசர் இன்னருளுக் கென்றும் இலக்காகிச்
சதிராக வாழ்ந்திடுவர் தாம்'' என்றுமங்களகரமாகத் தலைக்கட்டுகிறார்.

"மாமுனி அருளிய உபதேச ரத்தின
மாலை தன்னைத் தெளிய வைக்க
அரிய பொழிப்பினைச் சுருங்க வுரைத்தனன்
கழிமகிழ் சிறப்பவிவ் வரலாற்று நூலால்;
வடமொழி தமிழ்மொழி யெனுமிரு மொழியும்
திடமுடன் பயின்று திறமுற ஆயும்
வைணவச் செம்மலாய் வையகம் வாழ
வளமுறப் பயிலும் **வரதரா சன்னே.**

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்,

இங்ஙனம்

**C. ஜெகந்நாதாசார்யர்**

1, தேரடித் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை — 5
21-4-93

# நன்றியுரை

**வைணவ வழித்தோன்றல் வரலாறு** என்னும் இந்நூல் விசதவாக்சிகாமணியான மணவாள மாமுனிகள் அருளிய உபதேசரத்தினமாலை என்னும் பிரபந்தத்தின் தெளிவுரையாகும். 73 வெண்பாக்களடங்கிய இப்பிரபந்தத் திற்குப் பிள்ளைலோகம் ஜீயர் என்னும் ஆசார்யர் உரை வழங்கியுள்ளார். இவர் மணவாளமாமுனிகளின் அஷ்டதிக் கஜங்களான எண்மர்சீடர்களில் ஒருவரான பட்டர்பிரான் ஜீயர் என்னும் ஆசார்ய திருவம்சத்தில் அவதரித்தவர். இவர்தம் உரையின் சிறப்புப் பொருள்கள் இந்நூலில் பெரும்பாலான பாடல் உரைகளில் இடம் பெற்றுள்ளன. மேலும் இந்நூல் ஸ்ரீ உ.வே. காஞ்சீஸ்வாமியின் உரையையும் தழுவி எழுதப்பட்டதாகும்.

இத்தகைய பெருமைபெற்ற இவ்வுபதேசரத்தின மாலையைச் சிறுவயதில் அடியேன் தாய்வழிவந்த ஸ்ரீ. உ. வே. மதுரமங்கலம் ஸ்ரீனிவாசார்ய ஸ்வாமியிடம் முதன்முதலாகக் கற்கப்ராப்தமாயிற்று. பின்னர் திருப்பதி யில் அடியேனுடைய ஆசார்ய ஸ்வாமியான ஸ்ரீமான் உ. வே. வித்வான் சிரோமணி திருமலை அனந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியிடம் இப்பிரபந்தத்தின் வ்யாக்யானத்தைக் காலக்ஷேபமாகக் கேட்கவும் வாய்ப்பு ஏற்பட்டது. இதனால் இவ்வுரையில் ஈடுபட்டு மாமுனிகளின் 550வது திருவத்யயந திருநாளான ஆங்கீரஸ வருடம் மாசிதுவாதசி (18-2-93) அன்று **வைணவ வழித்தோன்றல்**

**வரலாறு** என்ற தலைப்பில் இந்நூலை அடியேன் எழுதத் தொடங்கி முடித்தேன்,

இந்நூலைச் செம்மைபடத் திருத்தி, சில கருத்துகளை எடுத்துரைத்த ஸ்ரீமான் உ. வே. தி. அ, கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி திறத்து அடியேன் தலையல்லால் கைம்மாறிலேன்.

இந்நூலுக்கு அழகூட்டும் வகையில் முன்னுரை வழங்கிய மதுரை ஸ்ரீ. உ. வே. தமிழ்ப் பேராசிரியர் R. அரங்கராஜன் ஸ்வாமிக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மேலும் அடியேன்பால் பேரன்பு கொண்டு மதிப்புரை வழங்கிய ஓய்வுபெற்ற UGC தமிழ்ப் பேராசிரியர் C. ஜகந்நாதாசார்ய ஸ்வாமியிடம் மிக்க நன்றியுடைய னாகிறேன்.

இந்நூலைச் சிறந்த முறையில் அட்டைமுகப்பையும் அச்செழுத்துக்களையும் அழகாக அமைத்துத் தந்த தெய்வப்பணிச் செம்மல் திரு. சரவணகுமார் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

இந்நூலில் அடியேன் அறியாமையாலும் கவனக் குறைவாலும் ஏற்பட்ட சொற்குற்ற பொருட்குற்றங்களைப் புலவர் பெருமக்கள் பொறுத்து அடியேனைக் கடைக் கணிக்க வேண்டுகிறேன்.

இப்படிக்கு

**மா. வரதராஜன்**

# பொருளடக்கம்



யதிபுநரவதாரபூதராய்
விசதவாக்சிகாமணியான
மணவாள மாமுனிகள்
(திருப்பதி)

ஸ்ரீ :

# வைணவ வழித்தோன்றல் வரலாறு

## முன்னுரை

உபதேசரத்தினமாலை என்னும் பிரபந்தத்தை அருளிய மணவாள மாமுனிகள் என்னும் ஆசார்யருடைய வைபவமும் அவரருளிய அப்பிரபந்தத்தின் கருத்தும் பிள்ளை லோகம் சீயர் உரைவழி சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

**மாமுனிகள் வைபவம்**

பெரிய ஜீயர் என்று பெயர் பெற்ற மணவாளமாமுனிகள் ஸம்ஸாரத்துக்கு அவ்வருகானவராய் இயல்பாகவே அடியரான நித்ய ஸூரிகளில் ஒருவர் வந்து அவதரித்தார் என்னும் ஏற்றத்தையுடையவர்; திருவாய்மொழிப்பிள்ளை என்னும் ஆசார்யர் திருவடிகளைப் பற்றி 'தேவுமற்றறியேன்' என்னும்படி அவரிடமே ஊற்றமுடையவர்; அவரது உபதேசத்தாலே திருவாய்மொழி முதலான எல்லாப் பிரபந்தங்களின் பொருளையும் அதின் கருத்தான எல்லா இரகசிய நூல்களின்பொருள்களையும்தெரிந்துகொண்டுநற்குணங்கள் நண்ணப் பெற்றவர்; அந்தப் பிள்ளைதாமே குருபரம்பரையாகிற மாலைக்கு நடுவே நாயகக்கல் என்னும்படி ஒளியைக் கொடுக்கும் இராமாநுசர் திருவடிகளையே 'உமக்கு ஒப்பற்ற தஞ்சமாகப் பெற்று இரும்' என்று உகப்பின் மிகுதியாலே காட்டிக் கொடுத்ததனால் அவ்விராமாநுசர் திருவடிகளில் மிக்க பற்றுடையவர்; ஆழ்வார்

ஆசார்யர்களின் அருளே தமக்குவிளை நீராம் படியாக வாழ்ந்து வந்தவர்; ஆகையினாலேயே நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார் மற்றும் ஆசார்யர்களில் நாதமுனிகள், ஆளவந்தார், இராமாநுசர் ஆகியோரின் ஸ்வபாவங்களை ஒவ்வொரு வகையாலே தம்மிடம் கொண்டவர்; பிறருடைய சீரையும் சிறப்பையும் தமக்குப் பயனாகக் கருதுகையாலே உயர்ந்த இரகசியப் பொருள்களைத் தம்முடைய பிரபந்தங்களில் வெளிப்படுத்திய பெருமை பெற்றவர்; 'மணவாள மாமுனியை இனி ஒப்பார்களில்லை உலகேழிலும் உம்பரூரிலும், என்னும்படி விண்ணாட்டிலும் மண்ணாட்டிலும் தம்முடைய அடிமைத் தன்மை முதலான குணங்களுக்கு உவமையின்றியிருக்கிற உயர்த்தியையுடையவர்; திருவரங்கத்துக்கு ஒரு உயர்ந்த செல்வமாய் இருந்து கொண்டு திருவரங்கம் திருப்பதியே இருப்பாக எழுந்தருளியிருந்தவராகையால் 'கோயில் மணவாள மாமுனி' என்பதே தம்மைக் குறிப்பிடும் பெயராம்படி இருப்பவரொருவர்.

இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த அழகிய மணவாள நாயனார் என்னும் பெயர்பெற்ற மாமுனிகள் ஆழ்வார் ஆசார்யர்களின் அவதாரங்கள் கடந்த காலத்தவையாகையாலே 'தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மையறிவார் ஆர் அருளிச் செயலை அறிவார் ஆர்' என்னும்படி அவர்களுடைய சொல்லும் செயலும் ஒருவர்க்கும் தெரியாதபடி குறைந்து வருவதைப் பார்த்தார்; தற்காலத்தில் சேதனர்களின் அறிவு மடமையையும் பார்த்து இனி இவர்களுக்கு, ஆழ்வார்களுடைய அவதார இரசியங்களென்ன, அவர்கள் அருளிய பாசுரங்களென்ன, அவை இரண்டையும் அறிந்த ஆசார்யர்களுடைய சொல் செயல்களென்ன இவை தொடக்கமான பொருட் சிறப்புக்களையெல்லாம் தம்முடைய பரம கருணையாலே வெளிப்படுத்த எண்ணினார். இச்சிறப்புப் பொருள்களையெல்லாம் உபதேசத்தினால் மட்டுமே வெளியிட்டால் அக்காலத்தவர்க்கே பயன்படுமா

கையால் பிற்காலத்தவரும் உய்யும் பொருட்டுப் பிரபந்த மாகப் பண்ண வேணும் என எண்ணினார். பின்பு ஆசார்யர் களுடைய உபதேச வழி வழியாகப் பெற்ற பொருள்களை உபதேச ரத்தின மாலையாகிற இப்பிரபந்தம் வாயிலாகத் தெரிவிக்கிறார். ஆகையாலன்றோ இதற்கு உபதேச ரத்தின மாலை என்று திருநாமமாயிற்று.

## பிரபந்த வைபவம்

இதுதான் ஆழ்வார் ஆசார்யர்களின் வைபவம் அவர்கள் அருளிய நூல்களின் வைபவம் ஆகியவற்றைத் தெரிவிப்பதா கையால் எல்லாப் பிரபந்தங்களைவிடத் தனிச் சிறப்புடைய தாயிருக்கும். இதில் தெரிவிக்கும் பொருள்தான் திருமந் திரத்தில் தெரிவிக்கிற— பிறர்க்கு அடிமையாகாமல் எம்பெருமான் ஒருவனுக்கே அடிமையாயிருத்தல் முதலிய மூன்று தன்மையோடு கூடிய மஹான்களுடைய பெருமையா யிருக்கும். ஆகையால் இதற்கு மூலம் திருமந்திரமாய் இருக்கும். திருமந்திரப் பொருளிலே நிலை நின்றவருடைய தன்மையையன்றோ நம்மாழ்வார், 'பயிலும் சுடரொளி' என்ற திருவாய்மொழியிலும் 'நெடுமாற்கடிமை' என்ற திருவாய்மொழியிலும் விரிவாகத் தெரிவித்தது. அதனைப் பின்பற்றியே மதுரகவியாழ்வாரும் 'கண்ணிநுண் சிறுத் தாம்பு' பாடியது. அதின் படியன்றோ இராமாநுசநூற்றந் தாதி என்னும் பிரபந்தம் அமைந்தது. அவை இரண்டும் ஆழ்வார்கள் பெருமையையும் எம்பெருமானார்பெருமையை யும் தெரிவிப்பதாகையாலே இதுவும் அதன்படியாயிற்று. ஆகையால் இவ்வுபதேச ரத்தினமாலை ஆசார்ய வைபவ நூல்கள் மூன்றனுள் முடிவாயிருக்கும்.

இனி இப்பிரபந்தத்தில் சொல்லப்படுபவர்களில் சிறந்தவர்களான ஆழ்வார்கள் திருநட்சத்திரம் (பிறந்த நாள்) முதலானவற்றை விரும்பிக் கொண்டாடுகைக்குக் காரணம் உலகோர் உய்வு பெறுவதேயாகும்.

எம்பெருமான், ஆசார்யனாயிருக்க ஆசைப்பட்டு க்ருஷ்ணாவதாரத்தில் பகவத் கீதையையும்இராமாவதாரத்தில் அபயப் பிரதானத்தையும் அருளினான். அவ்வவதாரங்களில் ஸம்ஸாரிகளைக் காப்பதின் பொருட்டு மனிதன் போல வந்து அவதரித்த நாளாகிய ரோகிணி, புனர்வசு ஆகிய நட்சத்திரமென்ன, ஆவணி, சித்திரை ஆகிய மாதங்களென்ன, யமுனை, ஸரயூநதிக் கரையிலுள்ள மதுரா, அயோத்தி ஆகிய நகரங்களென்ன—இவை தொடக்கமானவை இதிஹாஸ நூல்களில் சிறப்பாகக் கூறப்படுகின்றன. அவற்றை உலகோர் ஆதரித்துக் கொண்டாடி உய்வு பெறுகின்றனர். அவற்றில் போல் இப்பிரபந்தத்திலும் உபதேசித்து அவற்றைக் கொண்டாடுவதன் மூலம் அனைவரையும் உய்விப்பிக்கைக்காக எம்பெருமானுடைய இன்னருளாலே வந்து அவதரித்த ஆழ்வார்கள் நட்சத்திரங்கள் முதலியவற்றைச் சொல்லுகிறார். அவர்களுடைய திருவோணம் முதலான நட்சத்திரங்கள், ஐப்பசி முதலான மாதங்கள், காஞ்சீ முதலான நகரங்கள், காவிரி முதலான நதிகள் இவையெல்லாம் இதிகாச புராணங்களில் 'ஸ்ரீமந்நாராயண பக்தர்கள் கலியுகத்தில் ஆங்காங்கே சிற்சில இடங்களிலும், தமிழ்நாடுகளில் பலவிடங்களிலும் அவதரிக்கப் போகிறார்களல்லவா'. என்று தொடங்கி குறிப்பிடப்பட்டுள்ளன. அதற்கும்மேல் எம்பெருமானால் மயர்வற மதிநல மருளப்பெற்ற பெருமையும் இவர்களுக்கு உண்டு. அவர்கள்தாம் பக்திக்குப் பரவசப்பட்டு மோக்ஷோபாயமாக கருமயோகம் முதலியவற்றை அநுஷ்டிக்க முடியாமையால் பிரபத்தியை அநுஷ்டித்து பிரபன்னர் என்னும் பேர் பெற்றிருக்கை; அவனுடைய பத்து அவதாரங்கள் போல் பதின்மராய் எம்பெருமானுடைய பக்தாவதாரமாக அவதரிக்கை; அவன் உகந்த அர்ச்சாவதாரத்தலங்களில் தாங்களும் அதற்குத் தக்க அர்ச்சை வடிவு கொண்டு அவனைச் சேவித்திருக்கை; தாங்கள் மற்றவர்களால் வணங்கப்படுகை; தங்கள் சம்பந்தத்தால் எல்லா ஆத்மாக்களையும் உய்விப்பிக்க வல்லவராகை ஆகியவற்றால்

இவர்கள் திருநட்சத்திரங்களை எம்பெருமான் திருநட்சத்திரங்கள்போல் விரும்பிக் கொண்டாடக் குறையில்லை.

இனி, 'ஆழ்வார் திருமகளார் ஆண்டாள்' தொடக்கமான மற்றை மூவரும் இவ்வாழ்வார்களுக்கு அடிமைப்பட்டவர்களாகையால் அவர்கள் அவதாரம்போல் இவர்கள் அவதாரம் முதலானவையும் இந்நூலில் ஒருபடிப்படப் பேசப்பட்டுள்ளன. இவர்கள் அனைவருடைய ஏற்றத்தையும் விரும்புமவர்களாகையாலே பிள்ளான் முதலிய ஆசார்யர்களின் பிரஸ்தாவமும் இந்நூலில் வந்துள்ளது.

இவ்வாறு இந்தக் குருபரம்பரை வைபவத்தைத் தாம் இந்நூலின் வாயிலாக எடுத்துரைப்பதனாலே, குருகுலத் தலைவரான மணவாளமாமுனிகள் எல்லாரும் இக்குரு பரம்பரையின் பெருமையை அறிந்து உய்யும்படி உபகாரம் செய்தவராகிறார்.

——

# தனியன்

**கோயில் கந்தாடையண்ணன் அருளிச் செய்தது**

முன்னந் திருவாய்மொழிப்பிள்ளை தாமுபதேசித்தநேர்
தன்னின் படியைத் தணவாத சொல் மணவாளமுனி
தன்னன்புடன் செய்யுபதேசரத்தின மாலைதன்னைத்
தன்னெஞ்சு தன்னில் தரிப்பவர் தாள்கள்
சரண்நமக்கே.

முன்பு திருவாய்மொழிப் பிள்ளை, தமக்கு உபதேசித்தருளிய முறையைச் சிறிதும் தப்பாமல் எடுத்துரைக்கும் சொல்வன்மையையுடைய மணவாள மாமுனிகள், இவ்வுலக மக்கள் உய்யும் பொருட்டு மிக்க அன்புடனே அருளிச் செய்த உபதேசரத்தின மாலை என்னும் நூலைக் கண்ட பாடம் செய்து தம் மனத்தே மறவாமல் நிலைக்கச் செய்யுமவர்களுடைய திருவடிகளே நமக்குத் தஞ்சம் என்று மாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களில்—சிஷ்யர்களெண்மரில் ஒருவரான கோயில் கந்தாடை அண்ணன் அநுபவிக்கிறார்.

## முதற்பாட்டு

### தமக்குக் கிடைத்த உபதேச வழியின் படியே வெண்பாவில் அமைத்துப் பேசுவதாகக் கூறுதல்

எந்தை திருவாய்மொழிப் பிள்ளையின்னருளால்
வந்தவுபதேச மார்க்கத்தைச் சிந்தை செய்து
பின்னவருங்கற்க வுபதேசமாய்ப் பேசுகின்றேன்
மன்னியசீர் வெண்பாவில் வைத்து.

தமது ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் இன்னருளால் தமக்குக் கிடைத்த உபதேச வரலாற்றைச் சிந்தித்துத் தமக்குப்பின்புள்ளாரும் கற்கும்படி நிலைபெற்ற சிறப்பையுடைய வெண்பாவினால் அமைத்து உபதேசிக்கிறார்.

ஆழ்வார் ஒருவருக்கு எம்பெருமான் மயர்வற மதிநல மருளத்தாம் ஊரும் நாடும் உலகமும் தம்மைப்போல் ஆகும் படி மயர்வறமதிநலமருளி வாழ்வித்தாற்போல, மாமுனிகளும் தமக்குப் பிள்ளை அருளால் பெற்ற அர்த்தங்களையெல்லாம் உபதேசித்தருளி வாழ்வித்தருளுகிறபடி.

இப்பாட்டில், 'எந்தை திருவாய்மொழிப் பிள்ளை' என்பதனால் தாம் உய்யும்படி முயன்று வருவதற்குக் காரணமாய், பிள்ளையினிடம் அமைந்த ஆசார்யத்வமாகிய உறவும், 'இன்னருளால்' என்பதனால் பிள்ளையினிடம் ஒரு காரணமின்றி இயற்கையாகத் தம் திறத்தில் உண்டான அருளும், 'வந்த உபதேச மார்க்கத்தை' என்பதனால் உபதேச பரம்பரையாக அவரிடம் வந்த அந்தத் தூய ஞானத்தின் நிறைவும் மாமுனிகள் தமக்குத் தஞ்சமாகக் கருதியது காணலாம்.

## இரண்டாம் பாட்டு

### இப்பிரபந்தத்தைப் பகுத்தறிவாளர்கள் உகப்பதே போதுமென்றல்

கற்றோர்கள் தாமுகப்பர் கல்வி தன்னிலாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்பு கற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்? நெஞ்சே யிகழ்கை
ஆச்சரிய மோ தானவர்க்கு.

கல்வியறிவுடையார்கள் மகிழ்ச்சியடைவர்கள்; கல்வி பயிலுவதில் நாட்டமுடையவர்கள் இது கிடைக்கப் பெற்றோம் என்று உகந்து பின்பு இது தன்னைக் கற்பார்கள்! மற்றையோர்கள் பொறாமையாலே குற்றம் சொல்லுவர்களானால் அதனால் நமக்கு வந்த குறைதான் யாதாகும்? குறையில்லை என்றபடி. குற்றங் கூறுந்தன்மை அவர்கள் திறத்துள்ளமை ஆச்சரியமன்று என்று கூறித் தம் நெஞ்சைச் தேற்றியருளுகிறார்.

## மூன்றாம் பாட்டு

### ஆழ்வாராசார்யர்கள், அவர்கள் அருளிய நூல்கள், வேதம் ஆகியவற்றுக்கு வாழ்த்துக் கூறுதல்

ஆழ்வார்கள் வாழி யருளிச் செயல்வாழி
தாழ்வாதுமில் குரவர்தாம் வாழி—ஏழ்பாரும்
உய்ய வவர்களுரைத்தவைகள்தாம் வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பதின்மரான ஆழ்வார்கள் வாழ்வார்களாக; அவர்களருளிச் செய்த திவ்யப் பிரபந்தங்கள் வாழ்வனவாக; எந்தத் தாழ்வுமில்லாத பூர்வாசார்யர்கள் வாழ்வார்களாக; ஏழுவுலகங்களிலுள்ளவர்களும் உய்யும்படியாக அந்தப் பூர்வாசாரியர்கள் உரைகளும் இரகசிய நூல்களும் இவையனைத்துக்கும் மூலப்ரமாணமான வேதங்களும் வாழ்வனவாக.

இப்பாட்டுத்தான் இந்நூலில் தெரிவிக்கும் பொருள்களுக்கெல்லாம் சுருக்கமாக அமைந்ததாகும்.

## நான்காம் பாட்டு

### ஆழ்வார்களின் அவதாரமுறை கூறுதல்

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐயனருள் மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதனன்பர் தாட்டூளி நற்பாணன் நற்கலியன
ஈதிவர் தோற்றத்தடைவா மிங்கு.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், கீர்த்திவாய்ந்த திருமழிசையாழ்வார், அருள்மிகுந்த நம்மாழ்வார், குலசேகராழ்வார், தூயவரான பெரியாழ் வார் தொண்டரடிப்பொடியாழ்வார் நன்மையுடைய திருப்பாணழ்வார், நல்லதிருமங்கை யாழ்வார்; இப்படிச்சொன்ன இது இவ்வுலகில் இவ்வாழ்வார்களுடைய அவதாரங்களின் முறைமையாகும். இப்பாட்டில், 'புகழ்மழிசை' என்றது மஹீஸார க்ஷேத்திரம்என்ற புகழையுடைய திருமழிசைக்குத் தலைவரான திருமழிசைப் பிரானைச் சொன்னபடி. நம்மாழ்வாரை 'அருள் மாறன்' என்றது கருணையே வடிவாகவுடையவராகையாலே. 'துய்யபட்டநாதன்' என்பதனாலே பெரியாழ்வார் எல்லாக்காலத்திலும் இறைவனை வாழ்த்துகை முதலானதூய்மையையுடையவர் என்றபடி.

### ஐந்தாம்பாட்டு

**ஆழ்வார்கள் அவதரித்த மாத நட்சத்திரங்களைக் கூறுதல்**

அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்
இந்தவுலகில் இருள்நீங்க—வந்துதித்த
மாதங்கள் நாள்கள் தம்மை மண்ணுலகோர் தாமறிய
ஈதென்று சொல்லுவோம் யாம்.

அழகிய தமிழ்மொழியால் வேதங்களை நன்றாக ஆராய்ந்து அருளிச்செய்த ஆழ்வார்கள், இந்த உலகத்தின் அறிவின்மையாகிய இருள்நீங்கும்படி வந்து அவதரித்த மாதம் நட்சத்திரம் ஆகியவற்றை இவ்வுலகத்தார் அறியும் படி இன்னது என்று அருளிச்செய்கிறோம் என்கிறார்.

நற்கலையாவது குற்றமற்ற வேதமாகும்.

### ஆறாம் பாட்டு

**முதலாழ்வார்களின் மாத திருநட்சத்திரங்கள் கூறுதல்**

ஐப்பசியிலோண மவிட்டஞ் சதயமிவை
ஒப்பிலவாம் நாள்களுலகத்தீர்—எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனே தோன்று சிறப்பால்.

உலகத்திலுள்ளவர்களே! உலகமெங்கும் பேசப்படுகின்ற புகழையுடைய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் மிக்க ஒளியுடனே தோன்றிய ஏற்றத்தினால் ஒப்பில்லாத நாட்களாயின; அவை எவையெனில் ஐப்பசி மாதத்தில் முறையே திருவோணம், அவிட்டம், சதயம் என்னும் திரு நட்சத்திரங்களாகும். இப்பாட்டில் 'எப்புவியும் பேசு புகழ்' என்றது மூவருடைய

பிறப்பு, அறிவு, செயல் ஆகியவற்றின் பெருமையைக் கொண்டாடினபடி. மேலும் 'புலவர் நெருக்க உகந்த பெருமாள்' என்னும்படி மூவருடைய நெருக்கத்தாலே திருக்கோவலூரிடை கழியில் எம்பெருமானை உகக்கும்படி பண்ணின உயர்த்தியை உலகத்தார் புகழும்படியாயிருப்பது பற்றியுமாம்.

மேலும் ஐப்பசி மாதத்தில், அந்தத்திருவோண நட்சத்திரம்தான் திருமாலின் நட்சத்திரமாய், வைணவ ஆசார்யர்களில் உத்தமரான பிள்ளை லோகாசார்யரின் நக்ஷத்திர முமாகையாலே மாமுனிகள் மிகவும் ஆதரம் காட்டியது பொருந்தும்.

### ஏழாம்பாட்டு

### பொய்கையார் முதலான மூவருக்கு முதலாழ்வார்கள் என்ற திருநாமம் வந்ததன் காரணம் கூறுதல்

மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து
நற்றதமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த—
பெற்றிமையோர்
என்று முதலாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு
நின்றதுலகத்தே நிகழ்ந்து.

மற்ற எழுவராயுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே இவ் வுலகில் வந்து அவதரித்து நன்றான தமிழ்மொழியில் முதல் திருவந்தாதி, இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந் திருவந் தாதி என்னும் திவ்யப் பிரபந்தங்களை அருளிச் செய்து நாட்டிலுள்ளவர்கள் உய்யும்படி செய்த பெருமையுடைய வர்கள் என்ற காரணத்தால் முதவாழ்வார்கள் என்ற திரு நாமமானது இவர்களுக்கு உலகில் வழங்கப்பட்டு நிலை பெற்றது.

இவர்கள் மூவரையும் அ,உ,ம என்ற மூன்று எழுத் தடங்கிய 'ஓம்' என்ற பிரணவம் போலே முதன்மையாய்க் கருதுவர்.

### எட்டாம் பாட்டு

### திருமங்கையாழ்வாரது அவதார நாளைக் கூறல்

பேதை நெஞ்சே யின்றைப் பெருமையறிந்திலையோ
ஏது பெருமை யின்றைக் கென்றியேல் ஓதுகின்றேன் வாய்த்த
புகழ் மங்கையர் கோன் மாநிலத்தில் வந்துதித்த
கார்த்திகையிற் கார்த்திகை நாள் காண்.

அறிவில்லாத மனமே! இந்நாளின் வைபவத்தை நீ அறியவில்லையோ! இந்நாளுக்கு என்ன வைபவம் என்று கேட்பாயானால் அதை உனக்குச் சொல்லுகிறேன். அதாவது பொருந்திய புகழையுடைய திருமங்கை யாழ்வார் இந்தப்பரந்த உலகில் வந்து அவதரித்தது கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரமாகும்.இதை நீ தெரிந்து கொள் என்கிறார்.

இவ்வாழ்வாருக்கு வாய்த்த புகழாவது எம்பெருமானிட மிருந்தே திருமந்திரத்தை உபதேசமாகப் பெற்றமைய லாகும்.

### ஒன்பதாம் பாட்டு

### அவர் தமிழ் மறைக்கு ஆறு அங்கங்கள் அருளிய பெருமை

மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன்
ஆறங்கங் கூற அவதரித்த—வீறுடைய
கார்த்திகையிற் கார்த்திகை நாள் இன்றென்று காதலிப்பார்
வாய்த்தமலர்த்தாள்கள் நெஞ்சே வாழ்த்து.

நம்மாழ்வார் அருளிய தமிழ் மறையான திருவிருத்தம், திருவாசிரியம்,பெரிய திருவந்தாதி,திருவாய்மொழி என்னும்

நான்கு பிரபந்தங்களுக்கும் திருமங்கையாழ்வார் ஆறு அங்கங்களான பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திரு மடல், பெரிய திருமடல் என்னும் ஆறு பிரபந்தங்களை அருளிச்செய்ய அவதாரம் செய்த பெருமை பொருந்திய கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரம் இன்று என்று கொண்டாடுமவர்களுடையவையாய் நாம் வணக்கத் தக்கனவாய்த் தாமரை மலர் போன்ற திருவடிகளை நெஞ்சே வாழ்த்துவாயாக என்கிறார்.

அருளிச்செயல் நாலாயிரம் பாட்டின் பொருளை உப தேசம் செய்தவராய், திருக்கலிகன்றிதாசர் என்ற பெயரை யுடையரான நம்பிள்ளை என்னும் ஆசிரியர் பிறந்த திரு நன்னாளும் இதுவேயாகையாலே பெரியோர்கள் மிகவும் கொண்டாடி வருவர்கள்.

ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களுக்கு ஆறு அங்கங்களாவது சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிடம், கல்பம், ஆகியனவாகும்.

### பத்தாம் பாட்டு

### திருப்பாணாவாழ்வார் அவதார நாள் கூறுதல்

கார்த்திகையு ரோகிணிநாள் காண்மினின்று காசினியீர்
வாய்த்த புகழ்ப் பாணர் வந்துதிப்பால்—ஆத்தியர்கள்
அன்புடனே தானமலனாதி பிரான் கற்றதற்பின்
நன்குடனே கொண்டாடும் நாள்.

உலகத்தவர்களே! பொருத்தமான புகழையுடைய திருப்பாணாழ்வார் வந்து அவதரித்து அன்புடனே அமல னாதி பிரான் என்னும் பிரபந்தத்தை அருளியதனால் ஆஸ் திகர்கள் அதனைக் கற்று பின்பு நன்மையுடன் கொண்

டாடக் கூடிய நாளாகிய இன்று கார்த்திகை மாதத்தில் ரோகிணி நட்சத்திரம் என்று கண்டு கொள்ளுங்கள் என் கிறார்.

ரோகினி நட்சத்திரம் கண்ணனும், இவ்வாழ்வாரும், திருக்கோட்டியூர் நம்பி என்னும் ஆசார்யரும் அவதரித்து மும்மடங்கான ஏற்றத்தையுடையதாகையாலே முப்புரி யூட்டியிருப்பது.

ஆழ்வாருக்கு வாய்த்த புகழாவது தன் சொரூபத் துக்குச் சேர்ந்த புகழ்.அதாவது ஒருபடிப்பட்ட அடிமைக்குத் தக்கதான தாழ்ச்சியை, பிறப்பிலே இயல்பாகவே உடைய வராகையாலே இவரை ஸ்ரீ ரங்கநாதன் ஸ்ரீலோக சாரங்க முனிவர் தோளில் ஏற்றி வரும்படி நியமித்ததனால் ஏற்ற புகழ் என்றபடி.

## பதினொராம் பாட்டு

### தொண்டரடிப் பொடியாழ்வார் அவதார நன்னாள் கூறுதல்

மன்னியசீர் மார்கழியில் கேட்டையின்று மாநிலத்தீர்
என்னிதனுக்கேற்ற மெனிலுரைக்கேன்—துன்னுபுகழ்
மாமறையோன் தொண்டரடிப் பொடியாழ்வார் பிறப்பால்
நான் மறையோர் கொண்டாடும் நாள்.

பரந்த இந்த உலகத்தில் உள்ளவர்களே! இன்றைய தினம் நிலைபெற்ற பெருமையையுடைய மார்கழி மாதத்தில் கேட்டை நட்சத்திரமாகும். இந்த நாளுக்குப் பெருமை என்னவென்று கேட்பீர்களானால்சொல்லுகிறேன். அது, பெருமைபொருந்திய பிராம்மணர்களில் உயர்ந்தவ

ரான தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்தனாலே, நான்கு மறைகளையறிந்த வேதியர்கள் கொண்டாடும் நாளாகும் என்கிறார்.

மார்கழிக்கு சீர் மன்னுகையாவது மார்கழி மாதம் வைணவ மாத மாகையாலும், 'மார்கழித்திங்கள்' என்று ஆண்டாள் ஆதரித்த மாதமாகையாலும், கோயிலில் திருவத்யயன உற்சவம் தொடங்கும் காலமாகையாலும் வந்த சீர்மையாகும். மேலும் இவ்வாழ்வாரின் பிரபந்தமான திருப்பள்ளி யெழுச்சியை ஓதும் ஏற்றமும் நேர்பட்டபடி.

மேலும் இந்நன்னாளில் பெரிய கோயிலையும் பெரிய பெருமாளையும் பேணிக்கொண்டு வந்த இராமாநுச முனிக்குக் குருவான ஏற்றமுடைய பெரிய நம்பிகள் அவதரித்த உயர்த்தியும் சேரப் பெற்றதாகும்.

## 12ம் பாட்டு

### திருமழிசையாழ்வார் அவதார நன்னாள் கூறுதல்

தையில் மகமின்று தாரணியீரேற்ற மிந்தத்
தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன்—துய்யமதி
பெற்ற மழிசைப்பிரான் பிறந்த நாளென்று
நற்றவர்கள் கொண்டாடும் நாள்.

பூமியிலுள்ளவர்களே! இன்று தைமாதத்தில் மக நட்சத்திரமாகும். இத் தை மாத மக நட்சத்திரத்தின் ஏற்றம் என்னென்னில் தூய ஞானத்தையுடைய திருமழிசை யாழ்வார் பிறந்த நாள் என்று, நல்ல தவத்தையுடையோர் புகழ்ந்து சொல்லும் நாளாகும்.

'துய்யமதி பெற்ற' என்பதனால் தூய ஞானத்தை எம்பெருமான் இன்னருளாலே மயர்வற மதிநலமருளப் பெற்ற ஏற்றமாகும். மேலும் திருமழிசைக்குத் தலைவரான

ஆழ்வார் அவதரித்த நன்னாள் என்று நல்ல தவத்தைச் செய்தவர்கள் கொண்டாடும் நாளாகும்.

மதிக்குத் தூய்மையாவது மற்ற தெய்வங்கள் பக்கலில் மேன்மை பாராட்டும் குற்றம் இல்லாமை.

தவமாகிறது — ப்ரபத்தி. நல்தவமாகிறது ஆசார்ய அபிமானமே மோக்ஷஸாதநம் என்ற ஊற்றம். இதனை ஆழ்வார்பக்கல் அநுட்டித்துக் காட்டியவர்கள்கணிகண்ணர், பெரும் புலியூரடிகள் போல்வராவர்.

### 13ம் பாட்டு

### குலசேகராழ்வார் அவதார நன்னாள் கூறுதல்

மாசிப்புனர்பூசம் காண்மினின்று மண்ணுலகிர்
தேசித்திவசத்துக் கேதென்னில்—பேசுகின்றேன்
கொல்லி நகர்க்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்.

உலகோர்களே! இன்றைய தினம் மாசிமாதத்தில் புனர்வசு நட்சத்திரம் என்று கண்டு கொள்ளுங்கள். இந்தத் தினத்துக்குப் பெரு மதிப்புயாதெனில் சொல்லுகின்றேன். கொல்லி என்னும் நகரத்துக்குத் தலைவரான குலசேகராழ் வாருடைய அவதாரத்தாலே பெரியோர்கள் கொண்டாடும் நாளாகும் இது என்கிறார்.

இந்நட்சத்திரம் தான், சக்கரவர்த்தி திருமகன், இவ்வாழ்வார், மற்றும் இராமாநுசரின் திருவடி நிழலா யிருக்கும் எம்பார் என்னும் ஆசார்யர் ஆகிய மூவர் அவதாரம் செய்து முப்புரியூட்டினதாயிருக்கும்.

## 14ம் பாட்டு

### நம்மாழ்வார் அவதார நன்னாள் கூறுதல்

ஏரார் வைகாசி விசாகத்தினேற்றத்தைப்
பாரோரறியப் பகர்கின்றேன்— சீராரும்
வேதந்தமிழ் செய்த மெய்யனெழில் குருகை
நாதனவதரித்த நாள்.

அழகு பொருந்திய வைகாசி மாதத்தில் விசாக நட்சத்திரத்தின் ஏற்றத்தை உலகறியச் சொல்லுகிறேன். பெருமை நிறைந்த வேதங்களைத் தமிழ்மொழியில் திருவாய்மொழி என்னும் பிரபந்தம் வாயிலாக அருளிய மெய்ம்மையையுடையவராய், ஆழ்வார் திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வார் அவதரித்த நாளானமையே இதன் ஏற்றம் என்கின்றார்.

வைகாசி ஏரார்ந்திருக்கையாவது—மாதவமாதமாகை யாலே பூக்கள் மலரும் அழகையுடைத்தாகும். 'சீராரும் வேதம்' என்பதனால், ஒரு மனிதனால் உண்டாக்கப் படாததாய் எப்போதும் உள்ளதாய் எக்குற்றமுமில்லாத தால் வந்த சீர்மையுடையதாகை.

வேதம் தமிழ் செய்கையாவது—முதல் மூன்று வருணத்தவர்க்கே வேதமோதும் தகுதியுள்ளதனால், அது கற்று எல்லாரும் உய்வது அரிது என்று கருதி எல்லாரும் ஓதி உய்யும் பொருட்டு தமிழ்ப் பாசுரத்தாலே வேதப் பொருளை விவரித்து அருளைச் செய்தமையாகும். மெய்யன் என்றது அருளிச் செய்தது எல்லாம் வேதப் பொருள் என்று நம்புவதற்கு உரியவர் என்றபடி.

### 15ம் பாட்டு

### நம்மாழ்வாரும் அவர் திருநாளும் திருவாக்கும் ஒப்பற்றவை எனல்

உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்
உண்டோ சடகோபர்க் கொப்பொருவர்—உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு தென்குருகைக்குண்டோ
ஒருபார் தனிலொக்கு மூர்.

வைகாசி மாதத்து விசாக நட்சத்திரத்திற்கு ஒப்பான தினம் உண்டோ! நம்மாழ்வாருக்கு ஒப்பானவர் மற்றொருவர் உண்டோ! அவரருளிய திருவாய் மொழிக்கு ஒப்பானப் பிரபந்தம்தான் உண்டோ! இவ்வுலகில் தெற்குத் திசையிலிருக்கும் ஆழ்வார் திருநகரிக்கு ஒப்பான ஊர்தான் உண்டோ. இல்லை என்றபடி.

இத்தால் விசாகமென்னும் திருநட்சத்திரம், அதில் அவதரித்த நம்மாழ்வார், அவரருளிய திருவாய்மொழி, அவர் பிறந்த ஊரான ஆழ்வார் திருநகரி ஆகியவற்றின் ஒப்பில்லாமையால் வந்த பெருமையைச் சொன்னபடி.

### 16ம் பாட்டு

### பெரியாழ்வார் திருவவதார நன்னாள் கூறுதல்

இன்றைப் பெருமையறிந்திலையோ ஏழை நெஞ்சே
இன்றைக்கென்னேற்ற மெனிலுரைக்கேன்—நன்றிபுனை
பல்லாண்டு பாடியநம் பட்டர்பிரான் வந்துதித்த
நல்லானியிற் சோதிநாள்.

அறிவிலியான மனமே! இன்றைய தினத்தின் பெருமையை நீ அறிந்திலையோ! இன்றைத் தினத்தின்

பெருமையென்னென்னில் நன்மை வாய்ந்த திருப் பல்லாண்டை அருளிய நம்முடைய பெரியாழ்வார் அவதரித்த ஆனி மாதத்தில் சுவாதி நட்சத்திரமாகும் என்கிறார்.

## 17ம் பாட்டு

### பெரியாழ்வாருக்கு ஒப்பானவர் இல்லை எனக்கூறல்

மாநிலத்தில் முன்நம் பெரியாழ்வார் வந்துதித்த
ஆனிதன்னில்சோதியென்றால் ஆதரிக்கும்—ஞானியருக்
கொப்பொருவரில்லையிவ்வுலகு தனிலென்று நெஞ்சே
எப்பொழுதுஞ் சிந்தித்திரு.

இவ்வுலகில் முற்காலத்தில் நம் பெரியாழ்வார் வந்து அவதரித்த ஆனிமாதத்து சுவாதி நட்சத்திரத்தை விரும்பும் அறிவிற் சிறந்தார்க்கு இவ்வுலகில் ஒப்பு ஒருவரில்லை என்று மனமே எக்காலத்திலும் சிந்தித்து இரு என்கிறார்.

## 18 ம் பாட்டு

### பெரியாழ்வார் என்கிற பெயர்க்காரணம் கூறுதல்

மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றி—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வாரென்னும் பெயர்.

மங்களாசாசனம் பண்ணுவதில் மற்ற ஆழ்வார்களின் ஆர்வத்தளவு அன்றியே மேன்மேலெனப் பெருகி வருகிற அன்பாலே ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த பட்டர்பிரான் பெரியாழ்வார் என்ற திருநாமத்தைப் பெற்றார் என்கிறார்.

பொங்கும் பரிவாவது மேன்மேலெனப் பெருகி வருகிற அன்பு. அதாவது எம்பெருமானிடத்து கரைபுரண்ட காதல்.

மங்களாசானமாவது—எம்பெருமானது திருமேனியழகு காரணமாக, தம்மைப் பெரியவராகவும் அவனைச் சிறியவனாகவும் மயங்கி, அவனுக்கு மங்களத்தை விரும்பி, ஆசீர்வாதம் பண்ணுகையாகும்.

### 19ம் பாட்டு

### திருப்பல்லாண்டின் முதன்மைக்குக் காரணம் கூறல்

கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்
ஆதி திருப்பல்லாண்டு ஆனதுவும்—வேதத்துக்கு
ஓமென்னுமது போலுள்ளதுக்கெல்லாஞ் சுருக்காய்த்
தான் மங்கலமாதலால்.

ஆழ்வார்கள் அருளிச் செய்த குற்றமற்ற பிரபந்தங்களுக்கெல்லாம் முதலில் அனுஸந்திக்கப்படுவது திருப்பல்லாண்டாகும். இது வேதங்களுக்கு ஓம் என்று சொல்லும் பிரணவம் போல் மற்றப் பிரபந்தங்களுக்கெல்லாம் சுருக்கமாகவும் மங்களகரமாகவும் அமைந்த மங்களாசானம் என்கிறார்.

கலைக்குக் கோதில்லையாவது வேறு கதைகளை பற்றி வாராமை. ஆழ்வார்களுக்குக் கோதில்லாமையாவது எம்பெருமானது கருணைக்குத் தடையாகச் செய்யும் தன் முயற்சியான வேறு உபாயங்களைப் பற்றுதல், அவனை அடைவதிலுள்ள விரைவில் குறைவு இவை இல்லாமை என்றபடி.

## 20ம் பாட்டு

### திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வாருக்கும் ஒப்பில்லாமையைச் சொல்லல்

உண்டோ திருப்பல்லாண்டுக் கொப்பதோர் கலைதான்
உண்டோ பெரியாழ்வார்க்கொப்பொருவர்—தண்டமிழ்
நூல்
செய்தருளு மாழ்வார்கள் தம்மிலவர் செய்கலையில்
பைதல் நெஞ்சே நீ யுணர்ந்து பார்.

ஈரத்தமிழாலே பிரபந்தங்களை அருளிய ஆழ்வார்களிடத்திலும் அவர்கள் அருளிய பிரபந்தங்களிலும் திருப்பல்லாண்டுக்கு ஒப்பான ஒரு பிரபந்தம்தான் உண்டோ! பெரியாழ்வாருக்குச் சமானமான ஒருவர் உண்டோ! சிறுபிள்ளைத்தனத்தையுடைய மனமே உணர்ந்துபார்ப்பாயாக என்கிறார்.

## 21ம் பாட்டு

### ஆண்டாள் மதுரகவிகள் இராமாநுசர் ஆகியோரின் அவதார நன்னாட்களைக் கூறுதல்

ஆழ்வார் திருமகளாராண்டாள் மதுரகவி
யாழ்வார் எதிராசராமிவர்கள்—வாழ்வாக
வந்துதித்த மாதங்கள் நாள்கள் தம்மின் வாசியையும்
இந்தவுலகோர்க் குரைப்போம் யாம்.

பெரியாழ்வாருடைய திருமகளான சூடிக் கொடுத்த நாச்சியாரும், மதுரகவியாழ்வாரும் இராமாநுசரும் இவ்வுலகின் செல்வமாக வந்து அவதரித்த மாதங்கள், நட்சத்

திரங்கள் ஆகியவற்றின் பெருமையையும் இவ்வுலகோர்க்கு நாம் சொல்லக் கடவோம் என்கிறார்.

இவர்கள் மூவரும் ஆசார்ய அபிமானத்தில் ஊற்ற முடையவர்களாகையாலும் முறையே பூமிப் பிராட்டி, பெரிய திருவடி, திருவனந்தாழ்வானுடைய அம்சமாகை யாலும் வந்த சேர்த்தி அமைந்தபடி.

## 22ம் பாட்டு

### ஆண்டாள் அவதார நன்னாள் கூறுதல்

இன்றோ திருவாடிப்பூரம் எமக்காக
அன்றோவிங் காண்டாளவதரித்தாள்—குன்றாத
வாழ்வான வைகுந்த வான் போகந்தன்னை யிகழ்ந்து
ஆழ்வார் திருமகளாராய்.

அழகிய ஆடிமாதத்துப் பூர நட்சத்திரம்இன்றுதானோ. நமக்காக அல்லவோ, குறைவில்லாத வாழ்வாகிய-வைகுந்த திலுள்ள உயர்ந்த அநுபவத்தை விட்டு பெரியாழ்வாருக்குத் திருமகளாக இவ்வுலகில் சூடிக் கொடுத்த நாய்ச்சியார் அவதரித்தாள் என்கிறார்.

இப்பாட்டில், அரசியானவள் அரசனது பூம்படுக்கையை விட்டுக் குழந்தையினுடைய தொட்டிலைக் கட்டிக் கொண்டு கிடந்து அக்குழந்தையைக் காப்பாற்றுமா போலே ஆண்டாள் வைகுந்தத்தில் எல்லையற்ற ஆனந்தத்தை இகழ்ந்து நம்மைக் காப்பதற்காக இங்கு அவதரித்ததாக ஈடு படுகிறார்.

## 23ம் பாட்டு

### ஆண்டாளுக்கும் அவள் அவதார நன்னாளுக்கும் ஒப்பின்மை கூறல்

பெரியாழ்வார் பெண்பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த
திருவாடிப்பூரத்தின் சீர்மை—ஒருநாளைக்
குண்டோ மனமே யுணர்ந்துபார் ஆண்டாளுக்
குண்டாகி லொப்பிதற்குமுண்டு.

பெரியாழ்வாருடைய திருமகளான ஆண்டாள் அவதரித்த ஆடி மாதத்தில் பூர நட்சத்திரத்தின் பெருமை வேறொரு தினத்திற்கு உண்டோ! மனமே உணர்ந்து பார். சூடிக் கொடுத்த நாய்ச்சியாருக்கு ஒப்பு உண்டானால் இந்த நாளுக்கும் ஒப்பான நாள் உண்டாகும் என்கிறார்.

மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் விஞ்சின பொறுமை, கருணை முதலான குணங்களையும் நாவால் பேசினாலும் வாடும்படியான அழகையும் உடையளான ஆண்டாளுக்கு ஒப்பு இல்லாதாப்போலே இதற்கும் ஒப்பில்லை என்றபடி.

## 24ம் பாட்டு

### ஆண்டாள் பெருமை கூறல்

அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்குந் தன்மையளாய் பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

கொடிய உலகத்துக்கு அஞ்சி இறைவனுக்கு மங்களா சாசனம் பண்ணும் ஆழ்வார்கள் பதின்மர்குடிக்கு ஒப்பற்ற

திருமகளாய், ஆழ்வார்களைக் காட்டிலும் ஞானம், பக்தி, வைராக்கியம் முதலியவற்றால் விஞ்சியிருப்பவளாய், இளமையாயிருந்தே பரிபக்குவமானவளை— ஆண்டாளை பக்தியுடனே எப்போதும் மனமே மகிழ்ந்து துதிப்பாயாக என்கிறார்.

அஞ்சிகுடிக்கொரு சந்ததியாவது பாண்டவர்ஐவருக்கும் பரிக்ஷித்து ஒருவனே பிள்ளை வித்தானாற் போலே ஆண்டாளும் ஆழ்வார்கள் பதின்மருக்கும் ஒரு மகளா யிருக்கை அதாவது அவர்களனைவருடைய பக்திப் பெருக்க மெல்லாம் இவ்வொருத்தியினிடத்தில் தங்கப் பெற்று அவர்களுக்கு ஒரே மகளாயிருக்கை யென்றபடி,

## 25ம் பாட்டு

### மதுரகவியாழ்வாரின் அவதார நன்னாள் கூறுதல்

ஏரார் மதுரகவி இவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரைநாள்—பாருலகில்
மற்றுள்ள ஆழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்
உற்றதெமக்கு என்று நெஞ்சே யோர்.

சிறப்பு பொருந்திய மதுரகவியாழ்வார் இந்நிலத்தில் வந்து தோன்றப் பெற்ற சிறப்புடைய சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரமானது உலகில் பொய்கையாழ்வார் முதலான பத்து ஆழ்வார்கள் வந்து அவதரித்தருளின திரு நட்சத்திரங்களைக் காட்டிலும் நமக்கு மிகவும் கொள்ளத் தக்கது என்று மனமே நீ அறிந்து கொள் என்கிறார்.

'ஏரார் மதுரகவி' என்பதனால் எல்லாரும் தம்முடைய நிலையில் உள்ளபடி பண்ணவல்ல ஆசார்ய பரதந்திர நிறை வையுடையவர் மதுரகவிகள் என்பதாகும்.

26ம் மாட்டு

## மதுரகவியின் பிரபந்தம் நாலாயிரத்துள் சேர்ந்தமையைக் கூறல்

வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்
சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்த புகழ்
ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல்நடுவே
சேர்வித்தார் தாற்பரியந்தேர்ந்து.

நமக்கு ஏற்றதான திருமந்திரத்தின் இடையில் உள்ள நம: பதத்தைப் போல மதுரகவிகள் அருளிய பிரபந்தமான கண்ணிநுண் சிறுத்தாம்பை, நிறைந்த புகழுடைய பூர்வா சாரியர்கள் நாலாயிரத்திவ்யப் பிரபந்தத்தின் நடுவில் சேர்த்தருளினார்கள். அதன் கருத்தை நோக்கிச்செய்தபடி.

'ஓம் நமோ நாராயணாய' என்பது திருமந்திரம். இதன் இடையிலிருப்பது நம: பதம். இதுதான் ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் ஆகியவற்றின் விரோதிகளைப் போக்கி அவற்றை உள்ளபடி அறிவிக்கும். மேலும் அடியார்கட்கு இட்டவழக்காம் தன்மையையும் குறிப்பதாகும். அந்தப் பதம்போலே இவரது பிரபந்தமும் நம்மாழ்வார் திறந்து தலைமை, பற்றப்படும் தன்மை, அடையப்படும் தன்மை ஆகியன அருளிச் செய்தது. நன்றாயிருப்பதொரு முத்து மாலையைத் தொடுத்து அது ஒளிபெறும்படி உயர்ந்த நாயகக்கல்லை அதின் நடுவே பதித்தாற்போலே அருளிச் செயல்கள்தான் நிறம்பெறும்படி அவற்றின் நடுவே இவ் வாழ்வாரின் பிரபந்தத்தைச் சேர்த்தனர்.

ஆசார்ய பரதந்திரரான திருமலை அனந்தாழ்வான் அவதரித்ததும் சித்திரையில் சித்திரையன்றோ. ஆகையால் அவர்க்கு மதுரகவிதாஸர் என்னும் தாஸ்ய நாமமும் சேரப் பெற்றது.

## 27ம் பாட்டு

### எம்பெருமானார் தோன்றிய திருநாள் கூறுதல்

இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்த திருவாதிரை நாள்
என்றையினுமின்றி தனுக்கேற்ற மென்றான்—
என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர் தம் பிறப்பால்
நாற்றிசையுங் கொண்டாடும் நாள்.

உலகத்தவர்களே! இன்று சித்திரை மாதத்தில் சிறந்த திருவாதிரை நட்சத்திரமாகும். எல்லாத் தினங்களைவிட, இந்தத்தினத்திற்கு வைபவம் என்னவோ என்று கேட்பவர்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். அதாவது இது எம்பெருமானாருடைய திருவவதாரத்தை நான்கு திசையிலுள்ளவர்களும் கொண்டாடும் நாளாகும்.

யதுகுலநாதனான கண்ணனது அவதாரத்தைக் காட்டிலும் யதி(துறவியர்) குலத்துக்குத் தலைவரான இவருடைய வைபவம் மிக்க வைபவத்தையுடையதாயிருக்கும். அவன் அன்று திருத்தேர்த் தட்டிலேஒருவனுக்குத் தெளிவு பிறக்கும் படி பகவத்கீதை மூலமாக நெறியெல்லாம் எடுத்துரைத்தான்.

எம்பெருமானாரோவெனில் — அக்கீதையில் ஸாரமான சரமச்லோகத்தின் பொருளை கத்யத்தின் வாயிலாக அறிந்து பாரிலுள்ள எல்லோரும் அக்கண்ணன் திருவடிகளில் ப்ரபத்தி செய்து உய்யும்படி உபதேசித்தருளினார். அதனால் அவர் பிறந்த நாளை விட இவர் தோன்றிய நாள் உயர்ந்ததாயிற்று.

## 28ம் பாட்டு

ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களிலும்
வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்—ஏழ்பாரும்
உய்ய எதிராசர் உதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவாதிரை.

ஆழ்வார்களெல்லாம் அவதரித்த திருநட்சத்திரத்தைக் காட்டிலும் நமக்கு வாழ்வைத் தருவதான நட்சத்திர மானது மண்ணுலகில் உள்ளவர்களே! எம்பெருமானார் அவதரித்த சித்திரை மாதத்தில் செம்மையான திருவாதிரை நட்சத்திரமாகும் என்கிறார்.

'வாழ்வான நாள்' என்றது எம்பெருமானுடையவும் அவனடியார்களுடையவும் சீரும் சிறப்புமே தங்கள் பேறாம் படியிருக்கிற அந்த ஆழ்வார்கள் வாழ்வுக்கும் மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்து மங்கையராளி பாராங்குச முன்னவர் வாழ்வு முளைக்கப் பெற்றுக் காரணமாயிருக்கை யாலே நம்முடைய வாழ்வை உண்டாக்கும் நாளாயும் இருக்கும் என்றபடி.

இவர் அவதாரத்தாலே ஏழ்பாருமுய்கையாவது வேதாந்த நூல்களில் வரும் சந்தேகங்களையெல்லாம் தீரும்படி ஸ்ரீபாஷ்யம் என்னும் நூலில் எல்லாப் பொருள் களையும் ஐயமின்றி அருளினாறன்றோ.

## 29ம் பாட்டு

எந்தை எதிராசர் இவ்வுலகில் எந்தமக்கா
வந்துதித்த நாளென்னும் வாசியினால்—இந்தத்
திருவாதிரை தன்னின் சீர்மைதன்னை நெஞ்சே
ஒருவாமலெப் பொழுது மோர்.

எமது ஆசார்யரான இராமாநுசர் இந்த உலகத்தில் எங்களுக்காக வந்து அவதரித்த திருநட்சத்திரம் என்று சொல்லும் ஏற்றத்தினால் இந்தத் திருவாதிரை நட்சத்திரத்தின் வைபவத்தை மனமே தவறாமல் எக்காலத்திலும் அறிந்து கொள் என்கிறார்.

நம்முடைய விடியா வெந்நரகமான பிறவிக்கு ஒரு விடிவு பிறக்கும் படி அவதரித்ததாலே 'எந்தமக்கா வந்துதித்த' என்கிறார்.

## 30ம் பாட்டு

### முதலாழ்வார்கள் முதலானோர் அவதாரத்தலங்களைக் கூறுதல்

எண்ணருஞ்சீர்ப்பொய்கை முன்னோர் இவ்வுலகில் தோன்றியவூர்
வண்மைமிகு கச்சி மல்லை மாமயிலை—மண்ணியில் நீர்
தேங்கும் குறையலூர் சீர்க்கலியன் தோன்றியவூர்
ஓங்குமுறையூர் பாணனூர்.

எண்ணுவதற்கரிய வைபவத்தையுடைய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் இவர்கள் இவ்வுலகில் அவதரித்த நகரங்களாவன முறையே வளப்பமுடைய திருக்கச்சியும், திருக்கடன்மல்லையும், சிறந்த திருமயிலையுமாகும்; திருமங்கை ஆழ்வார் தோன்றிய நகரமானது மண்ணியாற்றின் நீர்நிறைந்த திருக்குறையலூராகும். திருப்பாணாழ்வார் தோன்றிய ஊர் உயர்ந்த உறையூராகும்.

கச்சிக்கு வண்மையாவது 'நிறைந்த சீர் நீள் கச்சி' என்கிற படியே நிறைந்த சீரையுடையதுமாய் அழகான நகர அலங்காரங்களையும் உடையதாகும்.

மேலும் கச்சி நகரிலே கிடந்த எம்பெருமானையும் கச்சியில் வந்து அவதரித்த ஆழ்வாரையும் சம்சாரிகள் கண்டு வாழும்படி காட்டிக்கொண்டிருக்கும் வண்மையைச் சொன்னபடி,

சீர்க்கலியன் என்றது, கலியன் என்னும்படி மோதிரம் முதலான ஆபரணங்களையும் எம்பெருமானிடமிருந்து அபகரித்து, பின்னர் அவனது சொத்தான பெரிய திருமந்திரத்தைப் பெற்ற சீர்மையையாகும்.

உறையூருச்கு ஓக்கமாவது அடிமைக்குத் தக்க உயர்ந்த குலத்தையுடைய ஆழ்வார் அவதரிக்கையால் வந்த உயர்த்தி. உறையூர் நாய்ச்சியார் பிறந்த இடமாகையால் வந்த பெருமையுமாம்.

## 31ம் பாட்டு

### தொண்டரடிப் பொடியாழ்வார், குலசேகராழ்வார் அவதாரத்தலம் கூறுதல்

தொண்டாடிப்பொடியார் தோன்றியவூர் தொல்
புகழ்சேர்
மண்டங்குடியென்பர் மண்ணுலகில்—எண்டிசையும்
ஏத்துங்குலசேகரனூரென வுரைப்பர்
வாய்த்த திருவஞ்சிக்களம்.

தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்த நகரமானது பழமையான பெருமை பொருந்திய திருமண்டங்குடி நகரம் என்று பெரியோர் சொல்லுவர்; எட்டுத்திசையிலுள்ளார் துதிக்கும் குலசேகராழ்வார் அவதரித்த நகரமானது அடியார்கள் ஈடுபடத்தக்க வஞ்சிக்களம் என்னும் நகரம் என்று பெரியோர் சொல்லுவர்கள் என்கிறார்.

## 32ம் பாட்டு

### திருமழிசையாழ்வார் முதலானோர் அவதாரத்தலம் கூறுதல்

*மன்னு திருமழிசை மாடத்திருக்குருகூர்*
*மின்னு புகழ் வில்லிபுத்தூர் மேதினியில்—*
*நன்னெறியோர்*
*ஏய்ந்த பத்திசாரர் எழில் மாறன் பட்டர்பிரான்*
*வாய்ந்துதித்த ஊர்கள் வகை.*

இவ்வுலகில் நிலைபெற்ற திருமழிசையும், 'மாடங்கள் சூழ்ந்த ஆழ்வார் திருநகரியும், விளங்கும் புகழையுடைய ஸ்ரீ வில்லிபுத்தூரும் முறையே நன்னெறியோர் பொருந்தி சேவிக்கும் திருமழிசை யாழ்வார், அழகிய நம்மாழ்வார், பெரியாழ்வார் ஆகிய மூவர் இவ்வுலகத்தைக் காப்பதற்குப் பொருத்தமாக அவதரித்தத் தலங்களாகும்.

'நன்னெறியோர் ஏய்ந்த பத்திசாரர்' என்பதில் நன்னெறியாவது ஆசார்ய அபிமானம். இதில் ஊற்றமுடையராய் பழுதாகாத வழியை யறிந்து பற்றின வர்களான கணிகண்ணர், பெரும்புலியூர் அடிகள் போல்வார் வேறுபயன் கருதாது ஆழ்வாரையே ஸேவிப்பவராய்ப் பொருந்தியிருப்பதைச் சொன்னபடி.

## 33ம் பாட்டு

### ஆண்டாள் மதுரகவிகள் உடையவர்களின் அவதாரத்தலங்களைக் கூறுதல்

*சீராரும் வில்லிபுத்தூர் செல்வத்திருக்கோளூர்*
*ஏரார் பெரும்தூரென்றுமிவை—பாரில்*
*மதியாருமாண்டாள் மதுரகவியாழ்வார்*
*எதிராசர் தோன்றியவூரிங்கு.*

பெருமை பொருந்திய ஸ்ரீ வில்லிபுத்தூர். வைத்தமா நிதி என்னும் பெருமானாகிற செல்வத்தையுடைய திருக்கோளூர், அழகு நிறைந்த ஸ்ரீபெரும்பூதூர் ஆகிய இந்த திவ்ய தேசங்கள் முறையே உலகில் ஞானம்மிக்குடைய சூடிக் கொடுத்த நாச்சியாரான ஆண்டாள், மதுரகவி யாழ்வார், எம்பெருமானார் ஆகியோர் அவதரித்த தேசங்களாகும்.

வில்லிபுத்தூருக்குச் சீர்மையாவது பொன்னும் மணியும் முத்தும் சேர்ந்தாற்போல பொன்னடியையுடைய வில்லிபுத்தூருறைவானையும், மணிவல்லி என்னும்படி பெண்மணியான நாச்சியாரையும், முத்துப் போல் உள்ளும் புறமும் தூயராய் முக்த ப்ராயரான (முக்தியடைந்தவர் போன்ற) பெரியாழ்வாரையும் பெற்றதால் வந்த எல்லையற்ற செல்வத்தை உடைமையாகும்.

திருக்கோளூருக்குச் செல்வமாவது வைத்தமா நிதியை உடைமை.

ஏரார் பெரும்பூதூரென்றது – தயைமிக்க எதிராசரான இராமாநுசர் அவதரிக்கையாலே அழகுமிக்குள்ள பெரும்பூதூர் என்றபடி.

### 34ம் பாட்டு

### அருளிச் செயலுக்கு அவதரித்த உரைகளைப் பற்றிக் கூறுதல்

ஆழ்வார்களேற்றம் அருளிச் செயலேற்றம்
தாழ்வாது மின்றியவைதாம் வளர்த்தோர்—ஏழ்பாரு
முய்யவவர் செய்த வியாக்கியைகளுள்ளதெல்லாம்
வையமறியப் பகர்வோம் வாய்ந்து.

ஆழ்வார்களுடைய வைபவமும், அவர்கள் அருளிச் செய்த திவ்யப்பிரபந்தத்தின் வைபவமும், தாழ்வேதுமின்றி

அவற்றை வளர்த்த பூர்வாசாரியர்கள்—ஏழலகமும் உய்யும் படியாக அருளிய உரைகளையெல்லாம், உலகத்தார்கள் அறியும்படி பக்தியோடு சொல்லக்கடவோம் என்கிறார்.

ஆழ்வார்களுக்கு ஏற்றமாவது தன் முயற்சியால் பெற்ற அறிவிற் சிறந்த முனிவர்களைப் போலன்றிக்கே எம்பெருமானுடைய இன்னருளாலே மயர்வறமதிநலமருளப் பெற்ற பெருமையும், மேலும் இறைவன் ஒருவனையே உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை எல்லா மாகக் கருதினமையும், அவனைப் பிரியில் அரைநொடியும் தரியாத தன்மையும் ஆம். இதுவன்றோ முனிவர்களைக் காட்டிலும் இவர்களுக்கு உண்டான ஏற்றம்.

அருளிச் செயலுக்கு ஏற்றமாவது அந்த எம்பெருமான் கொடுத்த திவ்விய மனக்கண் மூலமாக பக்தி வலியச் சொல்லுவிக்கச் சொன்னதாய் எம்பெருமான் ஒருவனையே சொல்லுவதில் ஊற்றமுடையதாய், சிறந்ததும் இனிமை யானதுமாய் எல்லா அர்த்தங்களையும் தெரிவிப்பதாய் எம்பெருமானும் விரும்புமதாய், பிறவியைப் போக்குவதாய் விரைவில் பயனைக் கொடுப்பதாய் அமைந்துள்ளமை.

ஏழ்பாருமுய்யச் செய்கையாவது செவிக்கினிய செஞ்சொற்களின் பொருளைக் கேட்டு, உலகத்தார் பகவானிடம் பக்தி செய்து உய்யும்படி ஆசாரியர்கள் அருளிச் செயல்களுக்கு உரைகளை அருளிச் செய்தமை யாகும்.

### 35ம் பாட்டு

### ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும் மதிக்க வேண்டுமெனல்

ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும்
தாழ்வா நினைப்பவர்கள் தாம் நரகில்—வீழ்வார்கள்
என்று நினைத்து நெஞ்சே எப்பொழுதும் நீ யவர்பால்
சென்றணுகக் கூசித்திரி.

முற்கூறிய ஆழ்வார்களையும் அவர்கள் அருளிய திவ்யப்பிரபந்தங்களையும் தாழ்வாக எண்ணுமவர்கள் நரகத்திலே விழுமவர்கள் என்று எண்ணி, மனமே நீ எக்காலத்திலும் ஆழ்வார்களையும் அவர்கள் பிரபந்தங் களையும் தாழ்வாக நினைக்குமவர்களிடத்தில் போய்ச் சேருவதற்கு வெட்கி அவர்களைக்கிட்டாமல் தூரத்திலே திரிவாயாக என்கின்றார்.

## 36ம் பாட்டு

### ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான ஆசாரியர்கள் நமக்குக்கதி எனல்

தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மையறிவாரார்
அருளிச்செயலை யறிவாரார்—அருள்பெற்ற
நாதமுனி முதலாம் நந்தேசிகரை யல்லால்
பேதை மனமே யுண்டோ பேசு.

உண்மை ஞானிகளான ஆழ்வார்களுடைய வைபவத்தை அறியுமவர்கள் யார்? அவர்கள் அருளிச் செய்த திவ்ய பிரபந்தத்தின் வைபவத்தை அறிவார் யார்? ஆழ்வாருடைய அருள் பெற்ற ஸ்ரீமந் நாதமுனிகள் முதலான நம் ஆசார்யர் களை அல்லாமல் ஆழ்வார்களின் வைபவத்தையும் அருளிச் செயலின் வைபவத்தையும் வேறு யாரேனும் அறிவரோ! அறிவிலியான மனமே நீ ஆராய்ந்து சொல்லுவாயாக என்கிறார்.

## 37ம் பாட்டு

### ஆசார்ய பரம்பரையில் எம்பெருமானார்க்குள்ள ஏற்றம் கூறுதல்

ஓராண் வழியாயு பதேசித்தார் முன்னோர்
ஏராரெதிராச ரின்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று
பேசி வரம்பறுத்தார் பின்.

எம்பெருமானார்க்கு முன்புள்ள ஆசார்யர்கள் ஒருவருக்குப்பின் ஒருவராக உபதேசித்துக் கொண்டு வந்தார்கள். பின்பு சிறப்பு வாய்ந்த எம்பெருமானார் தம் இனிய அருளால் ஆரியர்களை விளித்து உலகில் அருளிச் செயலில் விருப்பமுடையோர்க்கு இதன் பொருள்களை உபதேசியுங்கள் என்று நியமித்து ஓராண் வழியாகவே உபதேசிக்க வேண்டுமென்ற வரம்பை நீக்கியருளினார்.

## 38ம் பாட்டு

### எம்பெருமானார் தர்சனம் என்ற வழக்குக்குக் காரணம் காட்டல்

எம்பெருமானார் தரிசனமென்றே யிதுக்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்—
அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயலறிகைக்கா.

எம்பெருமானார் வளர்த்த இந்த ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தை பூமியிலுள்ளவர்கள் அறிந்து கொள் வதற்காக 'எம்பெருமானார் தரிசனம்' என்றே இதுக்கு திருவரங்கத்தெம்பெருமான் திருநாமமிட்டு நிலை நாட்டினார் என்கிறார்.

எம்பெருமானார் தரிசனமாவது— திருக்கோட்டியூர் நம்பியிடம் எம்பெருமானார் பலகால் சென்று பெற்ற பரமார்த்தத்தை உலகில் ஆசையுடையோர்க்கு அருளினது பற்றி நம்பெருமாள் மிகவும் உகந்து இன்று தொடங்கி 'எம்பெருமானார் தர்சனம்' என்று சொல்லும்படி உலகில் நிலைநாட்டினார் என்கை.

## 39ம் பாட்டு

### திருவாய்மொழியை உரையால் காத்தவர்கள் பற்றி கூறல்.

பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை
தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை
மணவாள யோகி திருவாய்மொழியைக் காத்த
குணவாளரென்று நெஞ்சே கூறு.

திருக்குருகைப் பிரான் பிள்ளானும், நஞ்சீயரும், பெரிய வாச்சான் பிள்ளையும், தெளிவுடைய வடக்குத் திருவீதிப் பிள்ளையும், வாதிகேசரி அழகிய மணவாளச்சீயரும் ஆகிய இவர்கள் திருவாய்மொழியை தங்கள் உரைகளாலே காத்தருளின பெரும் குணமுடையவர்கள் என்று மனமே நீ சொல்லுவாயாக என்கிறார்.

பிள்ளான் என்பவர் திருக்கோட்டியூர் நம்பி செய்த மகா உபகாரத்தை நினைத்து எம்பெருமானாரால் 'புத்திரன்' என்று அபிமானிக்கப் பெற்று திருக்குருகைப் பிரான் என்று திருக்கோட்டியூர் நம்பியின் திருநாமம் இடப் பெற்றவராவர்.

நஞ்சீயர் என்பவர் எல்லாமறிந்த கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டராலே 'நம்முடைய சீயர்' என்று அபிமானிக்கப்பட்டு, அவரிடத்தில் எல்லா அர்த்தங் களையும் ஐயமறக் கேட்டு, பின்பு நூறு உரு திருவாய் மொழிப் பொருளைச் சொல்லி அத்தால் சதாபிஷேகம் பண்ணப் பெற்றவராவர்.

ஆழ்வாருடைய அவதாரத்தைப் போலேயான நம் பிள்ளை திருவடிகளில் எல்லா அர்த்தங்களையும் கற்றுக் கேட்டு அவருக்கு மிக்க அன்பரானவர் பெரியவாச்சான் பிள்ளை.

வடக்குத் திருவீதிப்பிள்ளை என்னும் ஆசார்யர் திருவாய்மொழியின் பொருள்களெல்லாம் பிரகாசிக்கும் படியான தெளிந்த அறிவுடையராய் பெரியவாச்சான் பிள்ளையோடு ஒருகோவையாய் நம்பிள்ளையிடம் மிகவும் அபிமானம் கொண்டு இருந்தவராவர்.

மணவாள யோகி என்னும் வாதி கேசரி அழகிய மணவாளச்சீயர், பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நைநாராச்சான் பிள்ளையிடம் எல்லாப் பொருள்களையும் தெரிந்து கொண்டு மற்ற மதங்களைக் கண்டித்து வாதி கேசரி என்னும் படியான விருது பெற்றவராவர்.

## 40ம் பாட்டு

### உரையாசிரியர்களுக்கு நன்றி பாராட்டுதல்

முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்
அந்த வியாக்கியைகளன்றாகில்—அந்தோ
திருவாய்மொழிப் பொருளைத் தேர்ந்துரைக்கவல்ல
குருவாரீக்கால நெஞ்சே கூறு,

முன்பே திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான ஐவரும் செய்தருளிய அந்தவியாக்யானங்கள் அவதரிக்கா விட்டால் ஐயோ! திருவாய்மொழியின் பொருள்களை தெளிந்து சொல்லவல்லவரான ஆசார்யரானார் இந்தக் காலத்தில் யார் ஆவார்கள்? மனமே நீ இதைச் சொல்லுவாயாக என்கிறார்.

## 41ம் பாட்டு

### ஆறாயிரப்படி அவதரித்தமை கூறுதல்

தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப் பிரான்
பிள்ளானெதிராசர் பேரருளால்—உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப் பொருளை யன்றுரைத்த
தின்பமிகுமாறாயிரம்.

தெளிவு பொருந்திய ஞானத்தையுடைய திருக்குருகைப் பிரான் பிள்ளான் தம்முடைய ஆசாரியரான இராமாநுசருடைய பேரருளாலே தமது திருவுள்ளத்தில் நிறைந்திருக்கும் அன்புடனே, நம்மாழ்வார் அருளிய திராவிடவேதமான திருவாய்மொழியின் பொருள்களை அக்காலத்திலே அருளிச் செய்தது இன்பம் மிகுந்த ஆருயிரப்படி என்னும் உரையாகும்.

## 42ம் பாட்டு

## ஒன்பதினாயிரப்படி அவதரித்தமை கூறுதல்

தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி
நஞ்சீயர் தாம்பட்டர் நல்லருளால்—எஞ்சாத
ஆர்வமுடன் மாறன் மறைப்பொருளை யாய்ந்துரைத்த
தேரொன்பதினாயிரம்.

உண்மை ஞானிகள் புகழும்படியான பெருமை உடைய வேதாந்தி என்னும் நஞ்சீயானவர்தம்முடைய ஆசார்யரான ஸ்ரீ பராசரபட்டரின் நல்லருளாலே குறையாத பக்தியுடன் மாறன் மறைப்பொருளை ஆராய்ந்து அருளிச் செய்தது அழகிய ஒன்பதினாயிரப்படி என்னும் உரையாகும்.

ஏரார்ந்திருக்கையாவது சொற்சேர்த்தியின் திறமை யாலும் பொருட்பெருமையாலும் வந்த அழகின் மிகுதியைச் சொன்னபடி.

## 43ம் பாட்டு

### இருபத்து நாலாயிரப்படி அவதரித்தமை கூறல்

நம்பிள்ளை தம்முடைய நல்லருளாலே வியிடப்
பின்பெரியவாச்சான் பிள்ளையதனால்—இன்பா
வருபத்திமாறன் மறைபொருளைச் சொன்ன
திருபத்து நாலாயிரம்.

நம்பிள்ளையானவர் தம்முடைய நல்ல அருளால் பெரிய வாச்சான் பிள்ளையைக் கட்டளையிட, அதனால் அவர் இன்பமாக வந்த பக்தியுடைய மாறனின் மறைப் பொருளை விரித்துச் சொன்னது இருபத்து நாலாயிரப்படி என்னும் உரையாகும். இது இதிகாசத்தில் உயர்ந்த ஸ்ரீ ராமாயண சுலோக எண்ணிக்கைக்கு ஈடாக இருபத்து நாலாயிர க்ரந்தமாக அருளிச் செய்ததாகும்.

## 44ம் பாட்டு

### ஈடு அவதரித்தமை கூறல்

தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை
வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை யிந்த
நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்த
தீடு முப்பத்தாறாயிரம்.

நம்பிள்ளை அருளிச் செய்யும் தெளிவான மார்க்கத்தை, வண்மையுடைய வடக்குத்திருவீதிப் பிள்ளை இந்த உலகத்தார் அறிந்துகொள்ளும்படி, மாறன் மறைப் பொருளை மிக மிக விளக்கமாக—விரிவாக உரைத்தது ஈடு என்னும் முப்பத்து ஆறாயிரப்படியாகும்.

நம்பிள்ளை செப்பு நெறியாவது தமக்கென்று ஒரு தனிப்பட்ட நெறியை வகுத்துக் கொள்ளாமல், நம்பிள்ளை அருளிச் செய்த அதே நெறி என்றபடி. அதாவது அவரருளியபடியே உரையெழுதுகை.

ஈடு என்பது மாறன் மறைப்பொருளை அனைவரும் ஈடுபடும்படியன்றோ அருளிச் செய்ததனால் என்க. ச்ருதப்ரகாசிகை என்னும் நூலின் எண்ணிக்கையில் அமைந்ததனால் முப்பத்தாறாயிரம் க்ரந்தங்கள் கொண்ட அதனோடு இது ஈடானது என்றலும் ஒன்று.

### 45ம் பாட்டு

### பன்னீராயிரப்படி அவதரித்தமை கூறுதல்

அன்போ டழகிய மணவாளச்சீயர்
பின்போருங் கற்றறிந்து பேசுகைக்காத்—தம்பெரிய
போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்த
தேதமில் பன்னீராயிரம்.

வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் அன்புடனே பின்புள்ளாரும் கற்று அறிந்து சொல்லுவதற்காக தம்முடைய மகத்தான ஞானத்துடன் மாறன் மறையின் பொருளைச் சொல்லியருளினது குற்றமற்ற பன்னீராயிரப் படி என்னும் உரையாகும்.

தம் பெரிய போதமாவது— திருவாய்மொழியைத் தேர்ந்து பதவுரை போல் சுருக்கமாக உரைத்து விளக்க வல்ல தம்முடைய மகத்தான புத்தி. ஏதமில்லாமை—குற்ற மற்றிருக்கை. அதாவது ஆழ்வார் திருவுள்ளக் கருத்தைப் பின்பற்றுகை. இதுதான் பிள்ளான் அருளிய உரைக்கு இரு மடங்காய் பெரிய வாச்சான் பிள்ளை அருளிய உரைக்குப்

பாதியாய் அமைந்ததாகும். அதாவது மிகவும் சுருக்க மாகவும் மிகவும் விரிவாகவும் இல்லையென்றபடி.

### 46ம் பாட்டு

### பெரியவாச்சான் பிள்ளை உரைப்பெருமை கூறுதல்

பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய
அருளிச் செயல் பொருளை ஆரியர்கட்கிப்போ
தருளிச் செயலாய்த்தறிந்து.

பெரியவாச்சான் பிள்ளை, மற்ற மூவாயிரத்துக்கும் யாவரும் தெரிந்து கொள்ளும்படி வியாக்கியானங்களை செய்ததினாலே, ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களின் பொருள்களை, பின்புள்ள ஆசார்யர்களுக்கு இந்தக் காலத்தில் தாமும் அறிந்து கொண்டு பிறர்க்கும் உபதேசிக்க முடிந்ததாயிற்று என்கிறார்.

'அருளிச் செயலாய்த்தறிந்து' என்றது மிகவும் கடின மான பொருள்களை இவர் வியாக்கியானத்தாலே எளிதாக அறிந்து தாம் அநுபவித்ததோடல்லாமல் பிறர்க்கு உபதேச மாகவும் அருளிச் செய்ய இயன்றமையாகும். ஏனைய ஆசார்யர்களைக் காட்டிலும் இதன்றோ இவர்க்குள்ள தனிச் சிறப்பு!

### 47ம் பாட்டு

### நஞ்சீயரும் அழகிய மணவாளச்சீயரும் செய்த சில உரைகளைப் பற்றிக் கூறுதல்

நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு
எஞ்சாமை யாவைக்கு மில்லையே—தஞ்சீரால்
வையகுருவின் றம்பி மன்னுமணவாளமுநி
செய்யுமவை தாமுஞ்சில.

நஞ்சீயர் அருளிச் செயல் எல்லாவற்றுக்கும் உரை வழங்காமல் சிலவற்றுக்கே உரை வழங்கினார். பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும், வாதிகேசரி அழகிய மணவாளச்சீயரும் தத்தம் அறிவு தயை முதலிய குணங்களாலே செய்த உரைகளும் சில அருளிச் செயல்களுக்கு உள்ளன என்கிறார்.

திருப்பாவைக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்புக்கும் நஞ்சீயர் உரையருளினார். அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் அவ்விரண்டுக்கும் உரை அருளினார். திருவிருத்தத்துக்கு உள்ளுறை பொருள் வாதிகேசரி சீயர் அருளியதும் பிரசித்தம்.

### 48ம் பாட்டு

### நம்பிள்ளை ஈட்டுரையை ஈயுண்ணி மாதவர்க்குக் கொடுத்தல்

சீரார் வடக்குத் திருவீதிப்பிள்ளை யெழு
தேரார் தமிழ் வேதத்தீடுதன்னைத் தாருமென
வாங்கி முன் நம்பிள்ளை ஈயுண்ணி மாதவர்க்குத்
தாங்கொடுத்தார் பின்னதனைத்தான்.

பெருமை பெற்ற வடக்குத் திருவீதிப் பிள்ளை திருவாய்மொழிக்கு (நம்பிள்ளையான தாம் செப்புநெறியை அப்படியே) எழுதி அருளிய சிறந்த உரையான ஈடு என்னும் முப்பத்தாறாயிரப் படியை நம்பிள்ளை முன்பு 'என்னிடம் கொடும்' எனப் பெற்றுக் கொண்டு அதனைப் பின்பு ஈயுண்ணி மாதவரிடம் கொடுத்தருளினார்.

வடக்குத்திரு வீதிப் பிள்ளைக்குச் சீருடைமையாவது ஆசாரியர் அருளாலே அவர் அருளிய அர்த்தங்களையெல்லாம் தெரிந்துஎழுதி எல்லார்க்கும் உதவும்படியான ஞானம்

முதலிய குணமுடையவராயிருக்கை; ஈயுண்ணி மாதவர் என்பவர் ஈயுண்ணிக்குடியில் அவதரித்தவர். நம்பிள்ளை திருவடிகளைப் பற்றினவர்; மாதவப் பெருமாள் என்று—நம் பிள்ளையின் ஆசாரியரான நஞ்சீயருடைய பெயரை நம் பிள்ளையால் இடப்பெற்றவர்.

### 49ம் பாட்டு

### ஈடு வளர்ந்த முறை கூறுதல்

ஆங்கவர் பால் பெற்ற சிறியாழ்வானப் பிள்ளை
தாங் கொடுத்தார் தம் மகனார் தங்கையில்—
பாங்குடனே
நாலூர் பிள்ளைக்கவர்தாம் நல்ல மகனார்க்கவர்தாம்
மேலோர்க்கீந்தாரவரே மிக்கு.

அவ்விடத்திலே நம்பிள்ளையிடமிருந்து பெற்ற ஈட்டை சிறியாழ்வான் அப்பிள்ளை என்னும் மறுபெயரையுடைய ஈயுண்ணி மாதவப் பெருமாள் தம் திருக்குமாரரான ஈயுண்ணி பத்மநாபப் பெருமாள் என்பவர் கையிலே தாமே கொடுத்தருளினார்; அவர் அதனை நாலூர் பிள்ளை என் பவருக்கும் அவரே தம் குமாரரான நாலூராச்சான் பிள்ளைக்கும் பின்பு அவர் தம் சீடர்களுக்குக் கொடுத் தருளினார் என்கிறார்.

**ஈட்டின் வரலாறு :** நம்பிள்ளை அருளாலே ஈயுண்ணி மாதவப் பெருமாளுக்குக் கிடைத்த ஈடானது மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளை வரையிலும் சம்பிரதாயமாக நடந்து வந்தபடியைக் கூறுகிறார்.

நம்பிள்ளையிடத்து நிதி பெற்றாற்போலே பெற்ற ஈட்டை மாதவப் பெருமாள் தம்முடைய குமாரரான பத்மநாபப் பெருமாளுக்கு உபதேசித்து, அதன் பின்பு தாம் திருவாராதனம் செய்து வந்த அந்த ஈட்டு ஸ்ரீகேசேத்

தையும் கொடுத்தார். இவ்விருவரும் தம் காலத்தில் இது தன்னை ஓராண்வழியாய் உபதேசித்து, ஸ்ரீகோசத்தை வெளிப்படுத்தாமல் தம் கோயிலாழ்வாரிலே திருவாராதனமாய் வைத்து நம்பிள்ளை சொற்படியே நிதியைக் காப்பாற்று வருவதுபோல காஞ்சியிலுள்ள பட்டர்கள் திருவீதியில் தம் திருமாளிகையில் பாதுகாத்து வந்தனர். பின்னர், பத்மநாபப்பெருமாள் தம் திருவடியில் குற்றேவல்களைச் செய்து வந்த நாலூர்பிள்ளை என்பவருக்கு ஈட்டை உபதேசிக்க எண்ணி, காஞ்சிப் பேரருளாளன் முன்பு அவரைக் கொண்டு போய் நிறுத்தி ஈட்டை ஒருவருக்கும் வெளியிடாமைக்கு ஊன்றி வைக்கிற பாவனையையாலே ஸ்ரீ சடகோபத்தை அர்ச்சகர் வாயிலாகத் திருமுடியில் ஊன்றச் செய்தார். நாலூர் பிள்ளை இதனை அறிந்து பேரருளாளரே, இதனை எல்லார்க்கும் வெளியிடும்படியாகச் செய்தருள வேணுமென்ற எண்ணத்துடன் பெருமாள் திருமண்டலத்தைப் பார்த்தார்.

அதன்படியே பெருமாளும் அர்ச்சகர் வாயிலாக 'இதனை (ஈட்டை) நீர் எல்லார்க்கும் அறியும்படி செய்ய வேணும்' என்று கட்டளையிட்டருளினார். அதைக் கேட்ட பத்மநாபரும் உகப்புடனே—தாம் நினைத்தபடி நடவாது எம்பெருமான் திருவுள்ளப்படியே நடத்தும்படி கட்டளையிட்டு அதுதன்னை உபதேசித்தருளினார். அந்த நாலூர் பிள்ளையும் தம்முடைய திருவுள்ளக் கருத்தின்படியே பெருமாள் தலைக் கட்டியருளாகையாலே அந்த உதவிக்குக் கைம்மாறாக, தம்முடைய பிள்ளைக்கு 'தேவப் பெருமாள்' என்று பெயரிட்டு நாலூராச்சான் பிள்ளை என்னும் மறு பெயருடைய அவருக்கு ஈட்டை உபதேசித்து அதனை வளர்த்து வரும் படி நியமித்தனர். அந்நாலூராச்சான் பிள்ளையான தேவப்பெருமாளும் தம் சீடரான திருவாய்மொழிப் பிள்ளை, திருநாராயணபுரத்து ஆய், திருவாய்மொழியாச்சான் முதலியோர்க்கு அவ்வீடு தன்னை உபதேசித்தார். இதுவே இப்பாட்டின் கருத்து.

பின்பு திருவாய்மொழிப் பிள்ளை பரமகருணையாலே தமது

சீடரான மணவாளமாமுனிகளுக்கு உபதேசித்து 'இது தன்னை உலகில் அதிகமாக ப்ரசாரம் செய்யுமென்று நியமிக்க, அதனைச் சிரஸா வஹித்து, அம்மாமுனிகள் 'ஈட்டுப்பெருக்கர்' என்று பிரசித்தராம்படி ஈட்டை ப்ரசாரம் செய்தருளினார்.)

## 50ம் பாட்டு

## திருநாமச்சிறப்பு கூறல்

**நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை**
**என்பரவர்தமேற்றத்தால்—அன்புடையோர்**
**சாற்று திருநாமங்கள் தானென்று நன்னெஞ்சே**
**ஏத்ததனைச் சொல்லி நீ யின்று.**

சிலரைப் பெரியோர்கள் தம்மவராக அபிமானித்து நம்பெருமாள், நம்மாழ்வார், நஞ்சீயர், நம் பிள்ளை என்று சொல்லுவார்கள். இவற்றை, அன்புடையவர்கள் - அவரவர்களுடைய வைபவத்தாலே அவரவர்களுக்கு இட்ட திருநாமங்கள் ஆகும் என்று நினைத்து, நல்ல மனமே நீ அந்தத் திருநாமங்களை இப்போது சொல்லித் துதிப்பாயாக என்கிறார்.

**நம்பெருமாள் திருநாமச்சிறப்பு:** முன்பு ஒரு காலத்தில் ஒரு கலபையிலே கொடியவர் சிலர் பெருமாளையும் அங்குள்ள மற்ற எம்பெருமான்களையும் வடதிசை கொண்டு சென்றனர். அப்போது பெருமாள் திருவடியில் அன்பு கொண்ட ராஜகண்ட கோபாலர் என்னும் அறையர் பெருமாளைப் பிரிய மனமின்றி வருந்த அவர்களிடம்சென்று தம்முடைய 'நுடங்கு கேள்வி இசை' என்னலாம்படியான பண்களாலே அவனைப் பாடினார். அவனும் மிக்க அன்புடன் உமக்கு வேண்டுவது என்னென்ன, 'நம்முடைய பெருமாள் இங்கே வந்தார் அவரைத் தரவேணும்,என்றார். ஆகில் 'கொண்டு போம்' என்று பல விக்ரஹங்களைக்

கொண்டு வந்து காட்டினான். அப்போது அவற்றில் தேடிக் காணாமையால் மனம் வருந்த அவனுடைய பெண் அழகிய மணவாளப் பெருமாளான இவரைத் தன் அந்தப்புரத்தில் வைத்துக் கொண்டு இருக்கும் செய்தியை அறிந்தார். அவனும் அவள் அறியாமல் 'அப்பெருமாளை இவரோ உம் முடைய பெருமாள்' என்று கொண்டு வந்து காட்ட 'குழலகர், வாயழகர் கண்ணழகர்' என்று சொல்லுகிற படியே அழகிய மணவாளப் பெருமாளை மிக்க அன்புடனே இவர்தாம் நம்பெருமாள்' என்று அணைத்துக் கொண்டு விரைவாகக் கோயில் வந்து சேர்ந்தார். அப்போது அனை வரும் பெருமாள் அன்று என்று சந்தேகிக்க, ஆயி ஆழ்வார் பிள்ளை என்பவர் 'இவர் நம்முடைய பெருமாளாம்' என்று உறுதிபடச் சொன்னார். அதுமுதல் அவருக்கு நம்பெருமாள் என்ற பெயர் பிரசித்தியாயிற்று.

**நம்மாழ்வார் திருநாமச் சிறப்பு:** முற்காலத்தில் திருவரங்கத்து எம்பெருமான், மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் சடகோபர் என்கிற ஆழ்வாரை நம்மாழ்வார் என்று அபிமானித்து பெரிய திரு அத்யயன உற்சவத்திற்கு திருநகரியிலிருந்து எழுந்தருளப் பண்ணுவதற்காக ஓலை எழுதி அனுப்பியது பற்றி நம்மாழ்வார் என்ற திருநாமம் பிரசித்தமாயிற்று. அதுவுமன்றிக்கே, ஒரு சமயம் மலை நாட்டிலே திருவரங்கத்து எம்பெருமான் வலசையாக எழுந்தருளினபோது மற்ற திருப்பதி எம்பெருமான்களும் ஆழ்வாரும் அங்கே எதிர் பாராமல் திடீரென்று ஒன்றுசேர அப்போது எம்பெருமான் ஆழ்வாரை மிகவும் கருணையுடன் 'நம்முடைய ஆழ்வாரே, நம்மருகே வாரும்' என்று தம்முடைய திவ்யமான தோளுக்கினியானில் (திருச்சியில்— பெருமாள் எழுந்தருளப் பண்ணும் பீடம்) வைத்து கொண்டார். பின்னர் முத்தின் சட்டையும், வட்டமணை முதலான வரிசைகளையும் கொடுத்தளிருனார்.இதுவன்றோ நம்மாழ்வார் திருநாமச் சிறப்பு. மேலும், பெரிய முதலியார் (நாதமுனிகள்) மற்றை ஆழ்வார்களைக் காட்டிலும்

நம்மாழ்வாரிடத்து அதிகமான ஈடுபாடு கொண்டு, திருவாய் மொழி முதலான பிரபந்தங்களையெல்லாம் அவர் அருளாலே பெற்று அந்த வேறுபாடு தோன்ற 'நம்முடைய ஆழ்வார்'என்று அபிமானித்ததனாலும் நம்மாழ்வார் என்று திருநாமம் வந்ததாகக் கூறுவர்.

**நஞ்சீயர் திருநாமச் சிறப்பு :** நம்மாழ்வாருடைய திருவாய்மொழியை எப்போதும் ஆராய்வதில் மூழ்கின வரான மாதவரென்னும் வேதாந்திக்கு நஞ்சீயர் என்று பெயர் வந்ததற்குக் காரணம் யாதெனில், இவர் பட்டர் திருவடிகளைப் பற்றி பின்பு மேல் நாட்டில் துறவறம்பூண்டு தமக்கிருந்த செல்வங்களைத் துறந்து திருவரங்கத்துக்கு வந்து சேர்ந்தார். பட்டர் திருவடிகளில் வணங்கி நின்றார். அக்காட்சியைக் கண்ட பட்டர் மிகவும் உகந்து 'நம்முடைய ஜீயர் வந்தார்' என்று அணைத்து எடுத்துக் கொண்டு கொண்டாடினார். அது முதலாக இவ்வேதாந்தியானவர் நஞ்சீயர் என்று அழைக்கப்பட்டார்.

**நம்பிள்ளையின் திருநாமச் சிறப்பு :** நஞ்சீயர் திருவாய் மொழிக்கு ஒன்பதினாயிரப்படி வியாக்யானம் செய்தவர். அதனை நன்றாக எழுதிக் கொண்டு வரும் படித் தம் சீடரான வரதராஜர் என்னும் நம்பிள்ளை கையிலே கொடுத்தருளினார். இவரும் ஊருக்குச் சென்ற போது ஆற்றில் வெள்ளத்தில் அந்த ஸ்ரீகோசம் அடித்துக் கொண்டு போய்விட்டது. பின்பு ஓர் இரவிலே அவ்வுரைப்படி ஒன்றும் தப்பாதபடி வேறொரு ஸ்ரீகோசத்தில் எழுதினார் நம்பிள்ளை.பின்னர் திரும்பிவந்து நஞ்சீயரிடம் காட்டினார். அதனை அவிழ்த்துப் பார்த்து அது மிகவும் நன்றாயிருக்கை ம்ாலே 'இது ஏது' என்று கேட்க நம்பிள்ளையும் நடந்ததை விவரமாகச் சொன்னார். அதனைக் கேட்டு 'இப்படி ஒரு அறிவுத் திறன் இருந்தபடி என்' என்று மிகவும் உகந்து 'நம்முடைய பிள்ளை — திருக்கலிகன்றிதாஸர்' என்று கொண்டாட அன்று முதல் நம்பிள்ளை என்ற திருநாமம் உலகம் புகழும்படியாயிற்று.

## 51ம் பாட்டு

### நம்பிள்ளைக்கு லோகாசார்யர் என்னும் திருநாமம் வரக்காரணம் கூறுதல்

துன்னு புகழ்க்கந்தாடைத் தோழப்பர் தம்முகப்பால்
என்னவுலகாரியரோ வென்றுரைக்கப் —பின்னை
உலகாரியஎன்னும்பேர் நம்பிள்ளைக்கோங்கி
விலகாமல் நின்ற தென்றும் மேல்·

பொருந்திய வைபவத்தையுடைய கந்தாடைத் தோழப்பர் என்னும் ஆசார்யர் தம்முடைய அன்பினாலே 'நீரென்ன லோகாசார்யரோ'' என்று சொன்னதினாலே பிற்காலத்தில் லோகாசார்யர் என்னும் திருநாமமானது நம்பிள்ளைக்கு வழங்கப்பட்டு நீங்காமல் மேலாக நிலைபெற்றது என்கிறார்.

நம்பிள்ளையுடைய ஞான மிகுதியையும், சீடர்களின் திரளையும் கண்டு பொறாமைப்பட்டு அவரை பெருமாள் முன்பு பரிபவித்தார் கந்தாடைத்தோழப்பர். பின்பு தன் வீட்டிற்கு வந்து தம் தேவியாரிடம் சொல்ல அவளும் இதனைக் கேட்டு, இரக்கத்துடன் சில வார்த்தைகளைச் சொன்னாள். பொறாமையால் வந்த கலக்கம் தெளிந்து, மிகவும் அநுதாபத்தோடு நம்பிள்ளையிடம் மன்னிப்பு கேட்கத் தன் நண்பர்களுடன் புறப்பட்டுச் சென்றார். அப்போது நம்பிள்ளையே தம் வீட்டு வாசலில் தோழப்பரை உகப்பிப்பதாக வர அப்போது நம்பிள்ளையின் வணக்கத்தையும், விநயம் ததும்புகின்ற சொல்லையும் கண்டும் கேட்டும், மிகவும் அன்பு கொண்டு 'இது ஒரு பரிமாற்றம் இருந்தபடி என்' என்று தம்முடைய அதிகமான ஆசையாலே அவரைப் பார்த்து, தேவரீர் இவ்வளவு நாளும் சில பேர்க்கு ஆசார்யராய் இருந்தீர். இப்போது உலகுக்கு எல்லாம் ஆசார்யராக இருப்பீர் என்று கொண்டாடி லோகாசார்யர் என்ற பெயர் நிலைபெறச் செய்தார்.

## 52ம் பாட்டு

### வடக்குத்திருவீதிப்பிள்ளை தம் குமாரருக்கு ஆசாரியர் பெயரிடல்

பின்னை வடக்குத்திருவீதிப்பிள்ளை யன்பால்
அன்ன திருநாமத்தை யாதரித்து—மன்னுபுகழ்
மைந்தர்க்குச் சாத்துகையால் வந்து பரந்ததெங்கும்
இந்தத் திருநாம மிங்கு

பின்னர் நம்பிள்ளை சீடரான வடக்குத் திருவீதிப் பிள்ளை, அன்பினாலே அப்படிப்பட்ட திருநாமத்தை விரும்பி நிலைபெற்ற புகழையுடைய தம்முடைய குமாரருக்கு அதனை இட்டதனால் இந்த லோகாசார்யர் என்னும் இத்திருநாமம் அவருக்கு இவ்வுலகில் எவ்விடத்திலும் பரவியது என்கிறார்.

கரை உடைந்து காடுமோடு எங்கும் வெள்ளம் பாய்ந்து பரக்குமாபோலே இந்தப் பிள்ளை லோகாசாரியர் என்ற திருநாம வெள்ளமானது அறிவிலி அறிவுடையார் என்கிற வேறுபாடு இல்லாது எல்லாரும் அறிந்து நினைத்து உய்யும்படி எங்கும் பரந்தது. மாமுனிகளும் 'வாழி உலகாசிரியன்' என்று திருநாமத்தைத் தினமும் தாம் பலகாலம் ஜபித்து, தம்மைச் சேர்ந்தவர்களும் அநுஸந்தித்து உய்யும்படி உபதேசித்து வந்தார். இதில் பராமுகமுடையாரையும் 'இப்படி எளிதும் இனிமையுமான திருநாமம் இருக்க இத்தை நினைத்து உய்வடையாமல் நாசமாய்ப் போவது நியாயமா என்றுவெறுத்து உரைப்பராம்.

## 53ம் பாட்டு

### இது முதல் ஏழு பாடல்கள் ஸ்ரீ வசனபூஷணம் என்னும் நூலின் பெருமை கூறல்

அன்னபுகழ் முடும்பை யண்ணலுலகாசிரியன்
இன்னருளால் செய்தகலை யாவையிலும்—உன்னில்
திகழ் வசனபூஷணத்தின் சீர்மை யொன்றுக்கில்லை
புகழல விவ்வார்த்தை மெயிப்போது.

பெரிய புகழையுடைய முடும்பை என்னும் நகரத்துக்குத் தலைவராய்,உயர்ந்தவராயிருக்கும் பிள்ளைலோகாசார்யர் தம்முடைய இனிய அருளாலே அருளிச் செய்த சாத்திரங்கள் (இரகசிய நூல்கள்) எல்லாவற்றிலும், ஆராய்ந்து பார்த்தால் சிறந்ததான ஸ்ரீ வசனபூஷணம் என்னும் மகாசாத்திரத்தின் பெருமை வேறொரு சாத்திரத்திற்கு இல்லையேயாகும். நான் இப்போது சொல்லும் இவ் வார்த்தை புகழ்ந்து சொல்லுவதல்ல; உண்மையேயாகும் என்கிறார்.

ஸ்ரீ வசனபூஷணத்தின் சீர்மையாவது—ருஷிகளின் சொற்களான சாத்திரங்களைக் காட்டிலும் மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் மேலானது, அத்தைக் காட்டிலும் அவர்கள் அருள் பெற்று அருளிச்செயலின்கருத்துக்களைவெளியிடுகிற ஆசார்யார்கள் வியாக்கியானங்கள் மேலானது. அவற்றிற் காட்டிலும் ஆசாரியர்கள் அருளைப்பெற்ற பிள்ளைலோகாசார்யரின் இரகசியநூல்கள் மேலானவை. உயர்ந்த எல்லாநூல்களிலும் ஸாரமாகக் கூறப்பட்ட பொருள்களையெல்லாம் ஒருங்கே வெளிப்படுத்துகையாலே வந்த பெருமையுடைத்தாகையாலே ஸ்ரீ வசனபூஷணம் என்னும் இந்நூல் அவை எல்லாவற்றிலும் சிறப்பானது. ஆகையாலன்றோ இதுக்கு ஒப்பில்லையென்று அருளிச் செய்தது.

## 54ம் பாட்டு

முன்னங்குரவோர் மொழிந்த வசநங்கள்
தன்னை மிகக் கொண்டு கற்றோர் தம்முயிர்க்கு—
மின்னணியாச்
சேரச்சமைத்தவரே சீர்வசனபூடண மென்
பேரிக்கலைக்கிட்டார் பின்.

பூர்வாசாரியர்கள் அருளிய வசனங்களையேபெரும்பாலும் சேர்த்து கல்வியிற் சிறந்தாருடைய ஆத்மாவுக்கு அழகான அணியாகச் சேர்த்து வரிசையாக அமைத்த அவ்வாசிரியர் தாமே பிறகு இந்த நூலுக்கு ஸ்ரீ வசனபூஷணம் என்கிற பெயரை இட்டருளினார் என்கிறார்.

'உயிருக்கு மின்னணியா' என்றது நிலையற்ற உடலுக்கு ஆபரணம் பண்ணி அலங்கரிப்பதுபோல இவர் நித்யமான உயிருக்கு ஆபரணம் அமைத்தபடி, கௌத்துபமணியான ஆத்மாவுக்கும் கௌத்துபம் என்னலாம்படியிருக்கை.

இரத்தினங்கள் நிறைந்த ஆபரணத்தை ரத்ன பூஷணம் என்னுமாபோலே ஆசார்ய வசனங்கள் நிறைந்ததாய், எண்ணுபவர்களுக்கு ஒளியை உண்டு பண்ணுவதாய் இருக்கையாலே இதுக்கு வசனபூஷணம் என்று திருநாமம் வந்தது என்பர் மாமுனிகள்.

## 55ம் பாட்டு

ஆர்வசநபூஷணத்தி னாழ்பொருளெல்லாமறிவார்
ஆரது சொன்னேரி லநுட்டிப்பார்—ஓரொருவர்
உண்டாகிலத்தனை காணுள்ளமே யெல்லார்க்கும்
அண்டாததன்றோ வது.

மனமே! ஸ்ரீ வசன பூடணத்தின் கம்பீரமான பொருள்களையெல்லாம் அறிந்து கொள்வாரில்லை; அந்த ஸ்ரீவசன பூஷணம் சொல்லுகிற முறையிலே அநுட்டிக்குமவர்களும் இல்லை; அதின் பொருளையறிந்து அவ்வாறே அநுட்டிக்குமவர் எங்கேனும் ஒரொருவர் உண்டாயிருப்பார்களானால் அவ்வளவேயுள்ளது. அதின் பொருளை அறிந்து அநுட்டித்தல் எல்லாருக்கும் கிட்டாததல்லவா என்கிறார்,

வசனபூஷணத்தின் ஆழ்பொருளை அறிந்தும் அந்த நிலையில் அநுட்டித்தும் வந்தவர் உலகாரியன் அருள் தப்பாது பெற்ற ஏற்றமுடைய மாமுனிகள் ஒருவர் அன்றோ இருப்பது என்பர் பிள்ளைலோகம் சீயர். 'உள்ளமே' என்றது வசனபூஷணத்தினால் அலங்கரிக்கப்பட்ட மனசே! என்றபடி. அதாவது அதின் ஆழ்பொருளை அறிந்துஅதற்கு ஏற்ற அநுட்டானத்தையும் செய்து கொண்டுவருபவர்களை ஆதரித்துக் கொண்டு வருவது இந்த மனம் என்றபடி.

## 56ம் பாட்டு

உய்ய நினைவுடையீருங்களுக்குச் சொல்லுகின்றேன்
வையகுரு முன்னம் வாய்மொழிந்த—செய்யகலை
யாம் வசநபூடணத்தினாழ்பொருளைக் கற்றதனுக்
காம் நிலையில் நில்லுமறிந்து

உய்வதற்கு எண்ணமுடையவர்களே! உங்களுக்குச் சொல்லுகிறேன்—பிள்ளைலோகாசாரியார் முன்பு அருளிய நேர்மையான சாத்திரமாகிய ஸ்ரீவசனபூடணத்தின் கம்பீரமான பொருள்களைக் கற்று அப்படி கற்றதற்குத் தகுந்த நிலையில் —அநுட்டானத்தில் ஊன்றி நிற்பீர்களாக என்கிறார்.

'நினைவுடையீர்' என்றது திருமந்திரத்தின் கருத்தான இப்பிரபந்தத்தைக் கற்று அநுட்டிக்கும்படியான ஊக்கம் தேவை என்பது சொல்லப்பட்டது.

எப்போதும் இனிமையாய் இருக்கிறது என்று மாமுனிகள் தம் தாழ்ச்சி தோற்ற அருளியபடி.

### 60ம் பாட்டு

#### ஆசார்ய சம்பந்தத்தின் ஏற்றம் கூறுதல்

தன்குருவின் றாளிணைகள் தன்னிலன்
பொன்றில்லாதார்
அன்புதன் பால் செய்தாலு மம்புயைகோன்-இன்பமிகு
விண்ணாடு தானளிக்க வேண்டியிரானாதலால்
நண்ணாரவர்கள் திருநாடு.

தன் ஆசார்யனுடைய திருவடிகளில் அன்பு சிறிதும் இல்லாதவர்கள் எம்பெருமான்திறத்து பக்தி செய்தாலும், திருமகள் கொழுநனான எம்பெருமான் தான் இன்பமிகு பரமபதத்தைக் கொடுப்பதற்கு ஆசைப்படமாட்டான். ஆதலால் ஆசார்ய பக்தியில்லாதவர்கள் பரமபதத்தை அடையமாட்டார்கள் என்கிறார்.

### 61ம் பாட்டு

#### ஆசார்ய சம்பந்தத்தின் ஏற்றம் கூறுதல்

ஞானமனுட்டான மிவை நன்றாகவேயுடைய
னான குருவை யடைந்தக்கால்—மாநிலத்தீர்
தேனார்கமலத்திருமாமகள் கொழுநன்
றானே னவகுந்தந்தரும்.

உலகத்தவர்களே! ஞானமும் அதற்கேற்ற அனுட்டானமுமாகிற இரண்டும் குறையற நிரம்பப் பெற்ற ஆசார்யனை அடைந்தால் தேன் பொருந்திய தாமரைப்

பூவிலிருக்கும் பெரிய பிராட்டியாருக்கு மணவாளனான எம்பெருமான் தானே வைகுந்தத்தைத்தருவான்என்கிறார்.

ஞானமாவது எம்பெருமானே உபாயம் என்பதில் உள்ள நம்பிக்கையும், அவனுக்குத் தொண்டு செய்வதில் விரைவையும் அறியும் அறிவு, அனுட்டானமானது அந்த ஞானத்துக்குத் தக்கபடி 'அலர்மேல் மங்கையுறைமார்பா உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்றும் 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும்' என்றும் 'நாயேன் வந்தடைந் தேன் நல்கியால் என்னைக் கொண்டருளே' என்றும் சொல்லுகிற ப்ரபத்தியும், அவனுக்குத்தொண்டு செய்வது மாகும். இப்பாட்டுத்தான் இப்பிரபந்தத்துக்கெல்லாம் உயிரான பாட்டு. இத்தால் ஆசார்ய அபிமானமே உத்தாரகம்—(வீடுபேறளிக்குமது) என்று சொன்னபடி.

## 62ம் பாட்டு

உய்ய நினைவுண்டாகில் உங்குருக்கள் தம்பதத்தே
வையுமன்பு தன்னையிந்த மாநிலத்தீர்—
மெய்யுரைக்கேன்
பையரவில் மாயன் பரமபதமுங்களுக்காம்
கையிலங்கு நெல்லிக்கனி.

இவ்வுலகத்தவர்களே ! உய்யவேணும் என்கிற விருப்பம் உங்களுக்கு உள்ளதாகில் உங்களுடைய ஆசார்யர் திருவடி களிலே பக்தியைச் செலுத்துவீர்களாக; உண்மையைக் கூறுகிறேன்- படத்தையுடைய திருவனந்தாழ்வான்மீது துயிலமர்ந்த எம்பெருமானுடைய பரமபதமானது உங்களுக்குக் கையில் விளங்கும் நெல்லிக் கனிபோல் எளியதாய்க் கிடைக்கும் என்கிறார்.

### 63ம் பாட்டு

### ஆசார்யன் செய்யும் உதவியைக் கூறுதல்

ஆசார்யன் செய்த உபகாரமானவது
தூய்தாக நெஞ்சு தன்னில் தோன்றுமால்—தேசாந்
தரத்திலிருக்க மனந்தான் பொருந்த மாட்டாது
இருத்தலினியேதறியோம் யாம்.

ஆசார்யன் செய்த உதவியானது தூய்தாக மனத்திலே தோன்றினால் ஆசார்ய சேவைக்கு மாறாக வேறு தேசத்தி விருப்பதற்கு மனமானது இசையமாட்டாது; இவ்வாறு ஆசார்ய சேவைக்கு மாறாக வேறு தேசத்திலிருக்கும் இருப்பு என்ன காரணத்தினாலோ நாம் அறிந்தோமில்லை என்கிறார்,

### 64ம் பாட்டு

### ஆசார்யன் திறத்துக் கைங்கர்யம் பற்றி கூறுதல்

தன்னாரியனுக்குத்தானடிமை செய்வதவன்
இந்நாடு தன்னிலிருக்கு நாள்—அந்நேர்
அறிந்து மதிலாசையின்றி யாசாரியனைப்
பிரிந்திருப்பாரார் மனமே பேசு.

தன்னுடைய ஆசார்யனுக்கு சீடனானவன் கைங்கர்யங் களை அவ்வாசாரியன் இவ்வுலகில் இருக்கும் வரையில்தான் செய்யப்போகிறான், பிறகு இல்லை. அந்த நேர்மையை அறிந்திருந்தும் அக்கைங்கர்யத்தில் விருப்பமில்லாமல் தன்னுடைய ஆசார்யனைப் பிரிந்து உயிர்வாழும் சீடர் யார், யாரும் இருக்கமாட்டார்கள். அப்படி இருந்தால், அவர் யாரென்று எனக்குக் கூறு என் மனமே என்கிறார்.

தன்னாரியனுக்குத்தானடிமை செய்வதாவது — தாய்க்குச்சோறு இடுமாபோலே தனக்கேவுரிய ஸ்வாமியான ஆசார்யன் ஒருவனுக்கே அடியனாய் அவருக்கு கைங்கர்யம் செய்வதே தனக்கு தாரகமாய் நினைத்துச் செய்து உய்வ தாகும்.

## 65ம் பாட்டு

### ஆசார்யன்—சீடன் செய்ய வேண்டியதைக் கூறுதல்

ஆசாரியன்சிச்சன் ஆருயிரைப் பேணுமவன்
தேசாரும் சிச்சனவன் சீர்வடிவை—ஆசையுடன்
நோக்குமவனென்னும் நுண்ணறிவைக் கேட்டு
வைத்தும்
ஆர்க்குமந்நேர் நிற்கையரிதாம்.

ஆசார்யனானவன் தன் சீடனுடைய அருமையான ஆத்மஸ்வரூபத்தைக் காக்கக்கடவன்; ஆத்மாவின் அடிமைத் தன்மையை யறியும் ஒளி பெற்ற சீடனானவன் ஆசார்யனுடைய சிறப்பான திருமேனியை அன்புடனே காப்பாற்றுமவன் என்று சொல்லும் நுண்ணிய அறிவை ஸ்ரீவசன பூடணத்தின் வாயிலாகக் கேட்டு இருப்பினும் அந்த வழியில் ஊற்றத்தோடு இருப்பது யாவருக்குமே (எந்த ஆசார்யருக்கும் எந்த சிஷ்யனுக்கும்) அருமையா யிருக்கும் என்கிறார்.

ஆசையுடன் நோக்குகையாவது ஆசையால் தூண்டப் பட்டவனாய் ஆசார்யன் திருமேனியில் புரையற்ற நட்புடனே அந்தந்த காலத்திற்குரிய கைங்கர்யங்களாலே அந்த திருமேனியை எல்லாக் காலத்திலும் காத்து வருகையாகும்.

### 66ம் பாட்டு

### சீடன் இருக்கும் இருப்பைக் கூறுதல்

பின்பழகராம் பெருமாள் சீயர் பெருந்திவத்தி
லன்பதுவுமற்று மிக்கவாசையினால்—நம்பிள்ளைக்
கானவடிமைகள் செய் யந்நிலையை நன்னெஞ்சே
ஊனமற வெப்பொழுதுமோர்.

பின்பழகராம் பெருமாள் ஜீயர் என்னும் ஆசார்யர் பெரிய பரமபதத்திற்கு போக ஆசையில்லாமல், அதிக ப்ரீதியுடனே தம்முடைய ஆசார்யரான நம்பிள்ளைக்கு ஏற்ற கைங்கர்யங்களைச் செய்து கொண்டிருந்த அந்த நிலையை, நல்ல மனமே நீ குறையில்லாமல் எப்போதும் ஆராய்ந்து கொண்டிரு என்கிறார்.

பின்பழகராம் பெருமாள் சீயர் என்பவர் நம்பிள்ளைக்கு மிகவும் அன்புடையராய் அவரிடம் எல்லாப் பொருட் களையும் கேட்டு அதன் படியே 'எல்லாம் வகுத்த இடமே' (எனக்கு எல்லாம் ஆசார்யனே) என்று நம்பிள்ளை திறத்து நிலையுடையராய் அவரை நொடிப் போதும் பிரியாது அவருக்குக் கைங்கர்யம் செய்வதிலேயே ஊன்றி யிருந்தவராவர்.

### 67ம் பாட்டு

### பூர்வாசார்யர்கள் அநுட்டானத்தைப் பின்பற்றக் கூறுதல்

ஆசாரியர்களனை வருமுன்னாசரித்த
ஆசாரந்தன்னை யறியாதார்—பேசுகின்ற
வார்த்தைகளைக் கேட்டு மருளாதே பூருவர்கள்
சீர்த்த நிலைதன்னை நெஞ்சே சேர்

பூர்வாசாரியர்கள் எல்லாரும் முன்பு அநுட்டித்துக் காட்டின அநுட்டானங்களை அறிந்து கொள்ளாதவர்கள் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டு மனம் திரியாமல் பூர்வர்களுடைய உயர்ந்த நிலையிலே இருக்கப்பார் மனமே என்கிறார்.

'பூர்வர்கள் சீர்த்த நிலை' என்பதில் சீர்மையாவது "சீர்த்த மதுரகவியருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தத்தில் தெரிவித்த சீர்மையாகும். நிலையாவது—நிஷ்டை அதுதான் திருமந்திரத்தின் (ஓம் நமோ நாராயணாய) மூன்று பதத்திலும் சொல்லப்படுகிற பரம்பொருள், தஞ்சமாகப் பற்றப்படும் உபாயம்,தொண்டு செய்வதற்காக நாம் அடையும் பொருள் என்றிம் மூன்று தன்மைகளையும் எம்பெருமான் திறத்து மட்டுமன்றியே அதற்கு எல்லை நிலமான ஆசார்யர் வரையில் அவற்றை நினைத்து அதன்படி நிலைத்திருக்கையாகும்.

### 68ம் பாட்டு

### நன்னெறியுடையாரைப் பின்பற்றச் சொல்லுதல்

நாத்திகரும் நற்கலையின் நன்னெறி சேராத்திகரும்
ஆத்திக நாத்திகருமாமிவரை—ஓர்த்து நெஞ்சே
முன்னவரும் பின்னவரும் மூர்க்கரென விட்டு நடுச்
சொன்னவரை நாளுந்தொடர்.

நாத்திகரும், உயர்ந்த சாத்திரங்களில் சொல்லப்பட்ட நல்ல நெறியில் படிந்த ஆத்திகர்களும், ஆத்திகநாத்திகருமாகிய இவர்களை மனமே நீ ஆராய்ந்து முதலில் சொன்ன நாத்திகரும் இறுதியில் சொன்ன ஆத்திகநாத்திகரும் முரட்டுத்தனமுடையார் என்று நினைத்து அவர்களை விட்டு விட்டு இடையில் சொன்ன ஆத்திகரை மட்டும் எப்பொழுதும் பின்பற்றுவாயாக என்கிறார்.

நற்கலையாவது—சீர்த்த மதுரகவி செய்கலையான கண்ணி நுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தமாகும்.

நன்னெறியாவது 'தேவுமற்றறியேன்' என்றும் 'மேவினேன் அவன் பொன்னடி' என்றும் 'ஆள்புக்க காதலடிமைப் பயனன்றே' என்று சொல்லும் மதுரகவிகளின் நன்நெறியான ஆசார்யாபிமானமே யாகும்.

நாத்திகரானவர் உள்ளோடு புறமோடு வாசியற உண்மைப் பொருளான கடவுளை இல்லை என்று சொல்லுபவகளாவர். ஆத்திகரானவர் உள்ளோடு புறமோடு வாசியறகடவுள் உண்டு என நம்புமவர்கள்.

நத்திகராத்திகராவர் வெளியில் ஆத்திகரைப் போலவும் உள்ளே நாத்திகராயுமிருக்குமவர்கள்.

## 69ம் பாட்டு

### நல்லோர் சேர்க்கையின் பயன்கூறுதல்

நல்லமணமுள்ள தொன்றை நண்ணியிருப்பதற்கு
நல்லமண முண்டாம் நயமதுபோல்—நல்ல
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக்
குணமதுவேயாம் சேர்த்தி கொண்டு.

நல்ல வாசனையுள்ள ஒரு பொருளைச் சேர்ந்திருக்கும் மற்றொரு பொருளும் அச்சேர்த்தியாலே நல்ல வாசனை யுள்ளதாயிருக்கும். அந்தத்தன்மைபோலநற்பண்புடையவர் களுடனே கூடியிருப்பார்க்குஅச்சேர்த்தியின் பெருமையாலே அந்த நற்பண்புகளும் உண்டாம் என்கிறார்.

நல்லமணமாவது—அல்லாதவற்றினுடைய பொல்லாத மணத்தையும் போக்கும்படியான வாசனை. பூவின் மணம் நல்ல மணம், அது பூவோடு சேர்ந்த கூந்தலின் சிக்கு

நாற்றத்தைப்போக்கித் தன்னையொத்த நல்ல மணத்தை யுண்டு பண்ணுமது காண்க.

நல்லகுணமாவது—பகவத் பாகவதர்களுக்கு அடிமையா யிருத்தலே நமது ஸ்வரூபமென்று அறிந்து அவர்களிடம் பக்தி செய்கை. அது தன்னையுடையவர்களோடு சேர்ந்தவர்க்கு அறிவின்மை பக்தியின்மை முதலிய குற்றங்களைப் போக்கி அதற்கெதிர்த்தட்டான அறிவையும் பக்தியையும் உண்டாக்குமது காண்க.

## 70ம் பாட்டு

### தீயகுணமுடையோர் சேர்த்தியின் விளைவு கூறுதல்

தீயகந்தமுள்ள தொன்றைச் சேர்ந்திருப்பதொன்றுக்குத்
தீயகந்தமேறுந் திறமதுபோல்—தீய
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக்
குணமதுவேயாம் செறிவு கொண்டு.

கெட்ட நாற்றமுடைய ஒரு பொருளை சேர்ந்திருக்கும் மற்றொரு பொருளுக்கு துர் நாற்றம் வந்து சேரும். அதுபோல் கெட்ட குணமுடையோர்களுடனே சேர்ந்திருப்ப வர்களுக்கு அவர் சம்பந்தத்தால் அந்தக்கெட்ட குணமே யுண்டாகும் என்கிறார்.

## 71ம் பாட்டு

### மூர்க்கராவர் இன்னார் எனக் கூறல்

முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப்
பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே—தன்னெஞ்சில்
தோற்றினதே சொல்லிஃது சுத்தவுபதேசவர
வாற்றதென்பார் மூர்க்கராவார்.

(உபதேச வரவு ஆறு — உபதேசம்வந்த வழி
உபதேசவரவாற்றது — உபதேசத்தின்
வரலாற்றையுடையது)

மூர்க்கத்தனமுடையவர்கள் — பூர்வர்கள் அருளிய முறையைத் தவறாமல் பெரியோரிடம் கேட்டுப் பின்பு ஆராய்ந்து பார்த்து தாம் அந்த முறையைப் பிறர்க்குச் சொல்லாமல் தன் மனதில் தோன்றியது ஒன்றையே பிறர்க்குச் சொல்லி இவ்வாறு நான் சொன்ன பொருள் தூய உபதேச பரம்பரையாக வந்த பொருள் என்று சொல்லுவர்கள் என்கிறார்.

'நம்மாசார்யர்கள் திருவுள்ளக் கருத்தை நன்றாக அறிந்து அதுக்குத் தகுதியான சொற்களையும் அநுட்டானங் களையும் பின்பற்றாமல், தங்கள் மனத்தில் தோற்றினதே சொல்லும் சுயேச்சையாய் இருப்பவர்களாய், தங்கள் ஆசார்யர்பால் ஊற்ற மற்றிருக்கும் கருவிலே பாக்கியமற்ற கெட்ட மனமுடைய மூர்க்கருக்கு நம் தர்சனத்தின் கருத்தும் அதுக்கு ஏற்ற அனுட்டானமும் தெரியாததாகையாலே மேலெழுந்தவாரியான சிவப்புப் போலஇவ்வர்த்தம் நெஞ்சில் நில்லாது' என்று பட்டர்பிரான் சீயர் வார்த்தையை அருளுவர். ஆகையால் மூர்க்கர் தாம் தோன்றிகளாய்ச் சொல்வதை நம்ப வேண்டாமென்றபடி.

### 72ம் பாட்டு

### உபதேசத்தை முடித்தல்

பூருவாசாரியர்கள் போதமநுட்டானங்கள்  
கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர்—தேறி  
இருள்தருமா ஞாலத்தே இன்பமுற்று வாழும்  
தெருள் தருமா தேசிகனைச் சேர்ந்து.

பூர்வாசார்யர்களுடைய ஞானமும் அநுட்டானமும் இப்படியிருக்குமென்று கூறும் பாகவதர்களுடைய வார்த்தை களைக் கொண்டு, (ஆசார்ய லக்ஷணத்தைத்) தெளிந்து (அப்படிப்பட்ட லக்ஷணங்களையுடையராகையாலே) உங்களுக்குத் தெளிவையூட்டுகிற அப்படிப்பட்ட மஹாசார்யர்களையணுகித் தெளிந்து அவர்களுக்குத் தொண்டு செய்து கொண்டு, பரமபதம் போகிற வரையில் இவ்வுலகிலேயே இன்பமுடன் வாழுங்கள் என்கிறார்.

### 73ம் பாட்டு

### பயனுரைத்துத் தலைக்கட்டுதல்

இந்த வுபதேசரத்தினமாலை தன்னைச்
சிந்தைதனில் நாளும் சிந்திப்பார்—எந்தை
எதிராச ரின்னருளுக் கென்று மிலக்காகிச்
சதிராக வாழ்ந்திடுவர் தாம்.

இந்த உபதேசரத்தின மாலையைத் தங்கள் மனதில் எப்போதும் எண்ணுபவர்கள் எமக்குத் தலைவரான இராமாநுசருடைய இனிமையான அருளுக்கு எக்காலத்திலும் இலக்காகிச் சிறப்பாக வாழ்ந்திருப்பார்கள் என்கிறார். அதாவது எல்லாப் பிரபந்தங்களை விடச் சிறந்ததான இந்த உபதேச ரத்தினமாலையாகிற பிரபந்தத்தை மனதிலே இடைவிடாமல் சிந்திப்பார் நம் தலைவரான எம்பெருமானார் அருள்பெற்று எல்லாக் காலத்திலும் எம்பெருமானை அநுபவித்துக் கைங்கர்யங்களைச் செய்து வாழ்வர்கள் என்றபடி.

உபதேசரத்தினமாலை என்றது உபதேச பரம்பரையாய் வந்த அர்த்த விசேஷங்களாலே கோப்புண்டிருக்கிற மாலை என்றபடி. மாலையாகத் தொடையுண்ட இரத்தினங்களில் ஒன்று குறைந்தாலும் பேரிழப்பாயிருக்கும். அப்படியே இந்த உபதேசரத்தினமாலையும் குருமாமணியான புருஷரத்னங்களால் கோப்புண்டு இருக்கும். அதாவது நம்பெருமாள், நம்மாழ்வார் என்று தொடங்கி திருவாய்மொழிப்பிள்ளை ஈறாக சம்பிரதாயத்தில் ஒருவரும் நழுவதலின்றியே ஒன்றாகக் கோப்புண்டிருக்கையாகும். இதுதான் மாலைக்குரிய அடையாளங்களையுடைத்தாய் இருக்குமது. மாமுனிகள் சேர்த்தருளின சேர்வையில் காணும்படி இருக்கும். அதுதான் ஆழ்வார்கள் பதின்மரையும் ஒரு பக்கமாகவும், ஆண்டாள், மதுரகவி ஆழ்வார், இராமாநுசர் ஆகியோரை நடுவிலும், நாதமுனி முதலான நம் தேசிகர் என்று மாமுனிகளுக்கு முன்பான ஆசார்யார்கள் எல்லாரையும் மற்றொரு பக்கமாகவும்—

இப்படி எல்லாரையும் சேரப்பிடித்து ஒரு மாலையாம் படியன்றோ மாமுனிகள் செய்தருளியது.

மாலையானது மார்புக்கு அலங்காரமாய் அணிந்து கொள்ளலாம்படி இருக்கும். இதுவும் மனதுக்கு அலங் காரமாய்த் தர்சிக்கப்படுமதாயிருக்கும். மார்பும் மனதும் சேர்ந்து பக்கத்தில் அன்றோயிருப்பது. இதுதான் பெருமதிப் புடையதான ரத்தின மாலையாகையாலே இத்தை வாடாப் பூமாலை போலே நாடோறும் அணிதல் தகும்.

சதிராக வாழ்கையாவது எம்பெருமானுடைய அருளுக்கு இலக்கானவர்களைப் போல, சிலபோது பயப்பட்டும் சில போது பயப்படாமலும் இருக்கையன்றிக்கே, இராமாநுச ருடைய அபிமானத்துக்கு இலக்கானவர்கள் மார்பிலே கை வைத்துக் கொண்டு உறங்கும்படி பயமற்றவர்களாய், சிறந்த வர்களாய் ஞாலம் புகழும்படி இருள்தரு மா ஞாலத்திலே இன்பமுற்று வாழும் பேறு பெறுவர்கள். அதாவது யதீந்திரப் பிரவணரான மணவாள மாமுனிகளாலே ரத்தின மாலை பூட்டப்பட்டவர்கள், யதீந்திரரான எம்பெருமானா ராலே பூ முடி சூட்டப் பெற்று வாழப் பெறுவர்கள்.

**எறும்பியப்பா அருளிச் செய்தது**

மன்னுயிர்காளிங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டினமானவனு நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.

நிலை பெற்ற சேதநர்களே! இவ்வுலகத்திலே மணவாள மாமுனிகளுடைய அழகிய திருவடிகளாகிய செந்தாமரை மலர்களைச் சிந்தித்து நமது தலையாலே தீண்டப் பெற்றால், அமாநவ புருஷரும் நம்மை தமது கையாலே தீண்டுதல் அவர் தமது கடமையேயாகும்.

(அல்லது— மணவாள மாமுனிகள் திருவடியைத் தீண்டினால் அதனாலேயே மோக்ஷமுண்டாம். அமானவன் தன் கரத்தாலே நம்மைத் தீண்டுதல் தேவையில்லை என்றும் கூறலாம்.)

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

